For private circulation only

Book Post

www.tchsportal.co.in

# கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்

விலை : ரூ 60

திசை தெரியாமல் திகைக்காதிருக்க திருச்சபை வரலாறு தெரியவேண்டும்

நவம்பர் 2021 • இதழ் 18



# ஆசிரியர் சுவடு

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே,

அந்தகார இருளிலிருந்து நம்மை ஆச்சரியமான ஒளிக்கு வரவழைத்த அருமை இரட்சகராம் இயேசு கிறிஸ்துவின் இனிதான நாமத்தினாலே வரலாற்றுச் சுவடுகள் வாசகர்கள் ஒவ்வொருவருக்கும் வாழ்த்துக்களையும், நன்றியினையும் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

இந்திய தேசம் மிஷனெரிகளின் வருகைக்கு முன்னதாக ஒரு சில மூடப்பழக்க வழக்கங்களினால் மூழ்கடிக்கப்பட்ட நிலையில் இருந்தது. கலாச்சாரத்திற்கு பெயர்போன ஒரு தேசமாக இருந்தாலும், சில காரியங்கள் மிக பயங்கரமாகவே இருந்தது. மதத்தின் பெயராலே அநேக மக்கள் மூடர்களாக்கப்பட்ட நிலையில், சில காரியங்களை ஏன் செய்கின்றோம், எதற்கு செய்கின்றோம் என்கிற நோக்கம் தெரியாமலேயே செய்து வந்தனர். ஒரு சில நூற்றாண்டுகளுக்கு முன்னர் கடவுள் பெயராலே செய்யப்படுகின்ற அனைத்துக் காரியங்களும் சரியானவைகளே என்ற சிந்தை மனிதர்களிடத்தில் இருந்தது. எனவே தான் கொல்கத்தா பகுதியில் மரித்த கணவனோடு கூட பெண்களை எரிப்பதும், குழந்தைகளை நதிகளில் வீசி எறிவதும், தொழு நோயாளிகளை உயிரோடு கூட எரிப்பதும் கடவுளின் ஆசீர்வாதத்தைக் கொண்டுவரும் என்று நம்பினர். தமிழகத்திலும் கூட பல மூடப்பழக்க வழக்கங்கள் மலிந்துக் கிடந்தன. உதாரணமாக ஆண் மருத்துவர் பெண்களுக்கு பிரசவம் பார்க்க கூடாது, பெண் பிள்ளைகளை இறைவனின் தொண்டு செய்வதாக எண்ணி அவர்களை தேவதாசிகளாக அனுப்பியது, பெண்சிசு கொலை போன்ற காரியங்கள் மலிந்து கிடந்தன. அது மட்டுமல்லாது, கிறிஸ்துவை அறிமுகப்படுத்திய பின்னர், கிறிஸ்தவர்களுக்கு மத்தியில் இருந்த மூடப்பழக்க வழக்களை வேரறுப்பது பெரும் சவாலாகவே இருந்தது.

இம்மாதம் **"மூடபழக்க வழக்கங்களும் - மீட்டெடுத்த மிஷனெரிகளும்"** என்ற தலைப்பில் பல ஆய்வு கட்டுரைகளை வெளியிட்டிருக்கின்றோம். வாசகர்கள் வாசிப்பது மட்டுமல்லாது, கருத்துக்களை ஆசிரியருக்கு தெரியப்படுத்தவும், நண்பர்களுக்கு இப்புத்தகத்தை அறிமுகப்படுத்தவும் அன்புடன் கேட்டுக் கொள்ளுகின்றேன். இப்புத்தகம் வெளிவருவதற்கு பெரும் பொருட்செலவுகள் உண்டு, இவ்வூழியத்தை தாங்குவதற்கு உதவ முன்வருவீர்களென்றால் மிகுந்த ஆசீர்வாதமாக இருக்கும்.

வரும் மாதத்தில் **"வெளிநாட்டு மிஷனெரிகளின் பெயரில் உள்நாட்டு ஊர்கள்"** என்ற தலைப்பின் கீழ் கட்டுரைகள் வரவேற்கப்படுகின்றன. இக்கட்டுரையில் மேலை நாடுகளில் பிறந்து, கிறிஸ்துவின் பொருட்டு நம் பகுதியில் பணி செய்த மிஷனெரிகளின் வாழ்வும், அவர்களின் பெயரில் இருக்கும் ஊர்களின் சிறப்பும் குறித்த கட்டுரைகள் வரவேற்கப்படுகின்றன. எழுத்தாளர்கள் நவம்பர் மாதம் 20ம் தேதிக்குள் ஆசிரியருக்கு அனுப்ப கேட்டுக் கொள்ளுகின்றேன். ஆண்டவர் தாமே உங்கள் ஒவ்வொருவரையும் ஆசீர்வதிப்பாராக

மன்னா செல்வகுமார்

















tchsportal.co.in







# கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்

மாத ஆய்விதழ் சந்தா விபரம்

| சந்தா விபரம் | உள்நாடு |
|---|---|
| தனிப்பிரதி | ₹ 60 + நன்கொடை |
| ஆண்டு சந்தா | ₹ 600 + நன்கொடை |
| ஐந்து ஆண்டு சந்தா | ₹ 3000 + நன்கொடை |

"கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்" மாத ஆய்விதழை நீங்கள் தொடர்ந்து பெற்றுக் கொள்ள G-Pay மூலம் நன்கொடை செலுத்த 91767 80001 என்ற எண்ணுக்கு செலுத்தவும் காசோலை மற்றும் வரைவோலை செலுத்த 'திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்' ( Tinnevelly Christian Historical Society ) என்ற பெயரில் எடுக்கவும்

**சந்தாவை வங்கி கணக்கில் செலுத்த**

Bank :- Federal Bank
Name :- Tinnevelly Christian Historical Society
Account number :- 1748 0200 0036 84
IFSC Code :- FDRL0001748




**கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்,**
கதவு எண் 2-2-3(4), வடக்குத்தெரு,
பங்களாச் சுரண்டை-627859,
தென்காசி மாவட்டம் (தமிழ்நாடு)
04633 290401
christianhistorical@gmail.com



வடிவமைப்பு
சுஜித் ரெக்ஸ்
75388 12218

பதிப்பாசிரியர்
மன்னா செல்வகுமார்
91767 80001

# மூடபழக்க வழக்கங்களை முடிவிற்கு கொண்டு வந்த முன்னோடி

# வில்லியம் கேரி

இந்திய தேசத்தின் வரலாற்று பக்கங்களில் மூடபழக்கவழக்கத்தினாலும், அறியாமையினாலும் படிந்த இரத்தக்கரைகள் இன்றும் அதின் ஈரம் காயாமல் இருக்கிறது என்றால் அது மிகையாகாது. இருநூறு ஆண்டுகளுக்கு முன்னர் நம் தேசத்தின் நிலை சொல்லொண்ணா வேதனைமிக்கதாக இருந்தது. கல்வி அறிவு பெறாத மக்களுக்கு மதத்தலைவர்களும், மதபோதனையாளர்களும் மதத்தின் பெயராலே எவைகளைக் கற்று கொடுத்தார்களோ, அதனை அப்படியே மக்கள் பின்பற்றி வந்தார்கள். பதினாறாம் நூற்றாண்டிலே மார்ட்டின் லூத்தர் காலத்தில் எப்படி பரிசுத்த வேதாகமம் மக்களின் கைகளில் இல்லாத போது, இதுதான் வேதத்தின் கட்டளை என்று மக்கள் வஞ்சிக்கப்பட்டு நிர்ப்பந்திக்கப்பட்டார்களோ, அதே நிலைதான் வேதங்களும், புராணங்களும் மக்களின் கைகளுக்கு எட்டாத போது நடைபெற்ற காரியங்கள் ஆகும்.



**இந்திய சூழல்**

மிஷனெரிகள் இந்திய தேசம் வந்த பொழுது பல பழக்கவழக்கள் அவர்களுக்கு மிக புதிதாகவே காணப்பட்டது. சற்றும் சம்பந்தம் இல்லாத மேலைநாட்டவர்களின் கலாச்சாரத்தோடு கூட ஒப்பிடும் போது ஒரு சில காரியங்கள் மேலைநாட்டவரின் சிந்தனைக்கும் கற்பனைக்கும் எட்டா உயரத்தில் இருந்தது. கிழக்கத்திய கம்பெனிக்காரர்கள் தங்கள் வியாபார நோக்கத்திற்காக இந்திய மக்களுக்கு பெரும் ஆதரவாக இருந்தார்கள். அநேக இந்துக் கோயில்கள் இக்காலங்களில் புணரமைக்கப்பட்டது, பல கோயில்களில் குடைமுழுக்கும், திருவிழாக்களும் கூட நடத்துவதற்கு பெரும் உதவிகளை செய்தார்கள். அவ்வாறு செய்தால் மட்டுமே இந்திய நாட்டின் வளத்தை அவர்களால் சுரண்டமுடியும் என்ற உள்நோக்கத்தோடு செய்து வந்தார்கள். மேலை நாடுகளிலிருந்து மிஷன் ஸ்தாபனங்கள் மிஷனெரிகளை அனுப்பும் போது அவர்களை தங்கள் எல்கைகளுக்குள்ளாக வரவிடாதபடி பல தடைகளை விதித்தார்கள். ஆனாலும் தடைகளை தகர்த்து, மதத்தோடு கூட கல்வியினையும் கொடுத்த மிஷனெரிகள், மக்கள் மத்தியிலே மலிந்து கிடந்த பல மூட பழக்கவழக்கங்களையும் வேரறுத்தார்கள்.

**புராணத்தில் 'சதி'**

கொடுமையான மூடபழக்கவழக்கங்களுள் ஒன்று மரித்துப்போன கணவனின் உடலுக்கு நெருப்பு வைக்கும் போது, உயிரோடு கூட இருக்கும் மனைவியும் மரித்த கணவனோடு கூட எரிக்கப்பட வேண்டுமென்பது வழக்கமாக இருந்தது. இப்பழக்கத்திற்கு சதி (Sati) என்று அழைத்தனர். தமிழ் மொழியிலே இதனை உடன்கட்டை ஏறுதல் என்று அழைத்தார்கள். சதி என்கிற வார்த்தை சமஸ்கிருத வார்த்தையாகும். இது ஒரு பெண் தெய்வத்தின் பெயராகும். சதி என்ற பெண் தெய்வத்திற்கு தாட்சாயிணி என்ற பெயருமுண்டு. திருமணமகிழ்ச்சி மற்றும் நீண்ட ஆயுளின் தெய்வமாக வணங்குகிறார்கள். தாட்சாயிணி, சிவனின் முதல் மனைவியாக கருதப்படுகிறார். சதி தன்னை மாய்த்துக் கொண்டபிறகு அவளின் மறுபிறவியாகிய பார்வதி,



# "இவரின் மனைவியும் சாக வேண்டுமா?

சிவனின் இரண்டாவது மனைவியானாள். சதியின் மரணத்திற்கும் புராணத்திலே கதைகள் உண்டு. சதியின் தகப்பன் தக்ஸன், இவர் பிரம்மாவின் மகனாக கருதப்படுகின்றார். தக்ஸனின் மகளாகிய தாட்சாயிணி சிவபெருமானை திருமணம் செய்துக் கொள்ள விரும்பினார். இத்திருமணத்தில் விருப்பம் கொள்ளாத தக்ஸன் பலகாரணங்களை சுட்டி திருமணத்தை எதிர்த்தார். ஆனால் அவருடைய தாட்சாயாணியோ தன் முடிவில் உறுதியாக நின்று திருமணம் முடித்தாள். ஒரு நாளிலே தக்ஷன் பெரிய யாகம் ஒன்றிற்கு ஏற்பாடு செய்திருந்தார். அதற்கு பலரை அழைத்திருந்தார். ஆனால் தன் மருமகனாகிய சிவனை அழைக்கவில்லை. இதனால் கோபம் மூண்ட தாட்சாயிணி அந்த யாக நெருப்பில் குதித்து தன்னை மாய்த்துக் கொண்டாள். கணவனின் மதிப்பிற்காக தன் உயிரை மாய்த்துக் கொண்ட தாட்சாயிணி போன்று ஒவ்வொரு பெண்ணும் கணவனுக்கு உண்மையாக இருக்க வேண்டும் என்று புராண கதைகள் கூறுகின்றது.

சமஸ்கிருதத்தில் சதி என்றால், தமிழில் 'கற்புள்ள பெண்' என்று பொருள். சதி என்றால் நல்ல மனைவி என்றும் பொருள் பெறுகிறது. ரிக் வேதத்திலே சதி கூறப்பட்டிருப்பதாக அறிய முடிகிறது. வரலாற்றின் படி கி.மு. 500ம் ஆண்டு முதலே இவைகள் நடைமுறையில் இருந்ததாக சொல்லப்படுகிறது. இந்திய தேசத்திலே 7ம் நூற்றாண்டிற்கு பிறகு இது சற்று பிரபலமடைந்து 17ம் நூற்றாண்டுவரை இந்திய தேசத்தில் அநேக இடங்களில் நடந்தேறியுள்ளது. இவைகளில் பெங்காலில் மட்டும் 18ம் நூற்றாண்டுவரை இந்நிலைமை நீடித்துள்ளது.

### வில்லியம் கேரி

1793ம் ஆண்டு இந்தியா வந்தடைந்த வில்லியம் கேரிக்கு பல கஷ்டங்கள் காத்திருந்தது. அவருடைய மனைவியை தவிர்த்து மற்ற பிள்ளைகளோடு கூட ஏப்ரல் மாதம் வந்தடைந்தார். அவருடைய மனைவி அதே வருடம் நவம்பர் மாதம் இந்தியா வந்தடைந்தர். ஆரம்பகாலங்களில், பாப்டிஸ்ட் திருச்சபை சாராத மற்ற மிஷனெரிகளால், பிரிட்ஷ்- இந்திய எல்கைக்குள் இருக்கவிடாதபடி விரட்டியடிக்கப்பட்டார். பின்னர் கொல்கத்தாவில் டென்மார்கின் கட்டுப்பாட்டிற்குள்ளாக இருந்த பாப்டிஸ் மிஷனெரிகளோடு கூட இணைந்து கொண்டார். ஆரம்பநாட்களில் எந்த ஒரு பண உதவியும் இல்லாத போது, ஒரு சாயப்பட்டறையில் பணிக்குச் சேர்ந்தார். தன்னுடைய பணி நேரம் போக மற்ற நேரங்களில் வேதாகமத்தை பெங்காலி மொழியில் மொழிப்பெயர்க்கும் பணியில் ஈடுபட்டார். தன் பணியின் நிமித்தமாக மித்னாபூர் (Midnapore) என்ற இடத்தில் குடியிருந்தார்.

### சதிக்கு எதிராக கேரி

ஒரு நாள் 1799ம் வருடம், வில்லியம் கேரி கொல்கத்தாவிலிருந்து திரும்பிக் கொண்டிருக்கும் போது, நோயா சேராய் என்ற இடத்தில், ஹூக்லி நதியின் அருகில் அநேக மக்கள் கூடியிருந்தார்கள். சற்று வித்தியாசமான கூட்டமாக இருந்தப்படியினாலும், முதல்முறையாக இந்தக் காட்சியைக் கண்டபடியினால் என்ன நடந்துக் கொண்டிருக்கிறது என்பதை விசாரிக்க முயன்றார். அங்கு கூடியிருந்த மக்கள் ஒரு மனிதர் மரித்துப் போனார் என்றும் அவருடைய இறுதிச் சடங்குகளை முடிப்பதற்காக கூடியிருக்கிறோம் என்று கூறினார்கள். மரித்தவரின் மனைவியும் அருகிலே நின்றுகொண்டிருப்பதை கண்ட கேரி, அவர்களிடம், **"இவரின் மனைவியும் சாக வேண்டுமா?"** என்று கேட்டார். அதற்கு அவர்கள் அந்த பெண்ணைக் காண்பித்து, அவளும் மரிப்பதற்கு ஆயத்தமாக இருக்கிறாள் என்று கூறினார்கள். கூறிவிட்டு தங்கள் வேலையினை கவனிக்க ஆரம்பித்தார்கள். அங்கு கண்ட நிகழ்வினை கேரி இவ்வாறு வர்ணிக்கின்றார்.

இரண்டரை அடி உயரத்திற்கும், இரண்டடி அலகத்திற்கும், நான்கு அடி நீளத்திற்கும் விறகுகளை அடுக்கி, மரித்தவரை அதின்மீது கிடத்தியிருந்தார்கள். அவளின் அருகிலே ஒரு கூடையில் இனிப்பூட்டப்பட்ட மாமிசத்தை ஒரு கூடையில் வைத்திருந்தார்கள். அந்த மரணப்படுக்கையின் அருகிலே அவருடைய மனைவி வித்தியாசமான முறையில் நடனம் ஒன்றை ஆடினாள். அதன் பிறகு இரண்டு தடவையாக மூன்று முறை மரித்த அவளது கணவனின் உடலை சுற்றி வந்து, கூடையில் இருந்த மாமிசத்தை அங்கு கூடியிருந்த மக்களின் நடுவே வீசினாள். அது மிகப் புனிதமானது என்று அங்கு கூடியிருந்த மக்கள் எடுத்து சாப்பிட்டார்கள். அதன் பின்பு மரித்த கணவனுடைய கழுத்துக்கு கீழாக ஒரு கையும், மற்றொரு

கை அவனுடைய கழுத்திற்கு மேலாகவும் இருக்கும்படியாக மரித்த போன கணவனுக்கு அருகிலே படுக்கவைக்கப்பட்டாள். அதன்பிறகு அங்கு கூடியிருந்த மக்கள், காய்ந்த கொக்கோ இலைகளை கணிசமான உயரத்திற்கு கொண்டு மூடினார்கள். அதன் பிறகு நெய் அல்லது வெண்ணெய் போன்ற ஒன்றை ஊற்றினார்கள். பின்னர் இரண்டு மூங்கில்களால் கட்டி, மரித்துப்போனவரின் நெருங்கிய உறவினர் ஒருவர் அந்த சிதைக்கு தீ மூட்டினார். அவ்வளவுதான் நெருப்பு மிக பயங்கரமாக எரிய ஆரம்பித்தது. கூடியிருந்த மக்கள் பெரிய ஆரவார தொனியினை எழுப்பினார்கள். அவர்கள் எழுப்பிய அந்த தொனியில் அந்த பெண்யிட்ட சத்தம் கொஞ்சம் கூட கேட்கவில்லை. தீ பற்றவைத்தப்பிறகு அந்த பெண் எழுந்துவிடக்கூடாது என்பதற்காகவே மூங்கில்களைக் கொண்டு இருக்கமாக கட்டினார்கள் என்பதை கேரி பின்னர் உணர்ந்து கொண்டார். கேரியினால் இதனை ஏற்று கொள்ளமுடியவில்லை.

அதிர்ச்சியில் உறைந்துப் போன கேரி, எப்படியாவது இக்கொடிய காரியத்தினை நிறுத்த வேண்டுமென தீர்மானித்தார். தன்னுடைய சக நண்பர்களான மார்ஷ்மேன் மற்றும் வார்டு ஆகியோருடன் கைக்கோர்த்து இதனை எதிர்க்க ஆயத்தமானார். முதல் கட்டமாக கொல்கத்தாவின் சுற்றுப்புறத்தில் 30 மைல்களுக்குள்ளாக ஆறு மாதத்தில் எத்தனை பெண்கள், எத்தனை வயதில், இவ்வாறு கொல்லப்பட்டார்கள் என்பதை அறியும்படி ஆட்களை அனுப்பினார். அவர்கள் கொண்டுவந்த கணக்கின்படியாக 130 பெண்கள் மரித்துப் போன கணவனோடு கூட எரியூட்டப்பட்டிருந்தார்கள். அதோடு கூட பல இந்து சமய தலைவர்களையும், இறையிலளார்களையும் சந்தித்து புராணங்களிலும், வேதங்களிலும் சதி குறித்து சொல்லப்பட்டிருப்பதை கேட்டறிந்தார். வில்லியம் கேரி சதியினை முதல்முறையாக கண்ட அதே வருடத்தில் சதியினை ஒழிக்க வேண்டுமென தீர்மானித்து **'சதி ஒழிப்பு'** என்ற இயக்கத்தை ஆரம்பித்தார். 1803ம் ஆண்டு கொல்கத்தாவில் போர்ட் வில்லியம் கல்லூரியில் (fort William College) ஒரு கலந்துரையாடலை ஏற்படுத்தினார். அநேக இந்துக்களும் கிறிஸ்தவர்களும் அதில் கலந்து கொண்டார்கள்.

1813ம் வருடம் ஹவுஸ் ஆப் காமனஸ் என்ற மன்றத்தில் வில்லியம் வில்பர்போர்ஸ் என்பவரைக் கொண்டு சதியினை எதிர்த்து தீர்மானம் நிறைவேற்றும்படியாக வேண்டினார். வில்லியம் வில்பர்போர்சும் வில்லியம் கேரி கொடுத்த கணக்கெடுப்புகளைச் சுட்டிகாட்டி பேசினார். 1816ம் வருடம் வில்லியம் கேரியினைப் போன்று சதிக்கு எதிராக களம் இறங்கிய ராஜாராம் மோகன் ராய் அவர்களும் வில்லியம் கேரியினை சந்தித்தார்கள். 1817ம் வருடம் வில்லியம் கேரி, அப்போதைய அரசாங்கத்திடம் சதியினைக் குறித்து இந்துப் புராணங்கள் என்ன கூறுகிறது என்பதை இந்து பண்டிதரான வித்தியாலங்கரிடம் கேட்கும்படியாக ஒரு மனுவினை சமர்ப்பித்தார். அம்மனுவில் சதியினை இந்து புராணங்கள் ஆதரிக்கின்றனவா என்பதைக் கேட்டறியும்படியாக வேண்டினார். அரசாங்கமும் மனுவினை ஏற்றுக்கொண்டு, வித்தியாலங்கரிடம் விசாரிக்கவே, அவர் இந்து புராணங்கள் சதியினை ஆதரிக்கவில்லை என்பதை தெளிவுப்படுத்தினார். வழக்கத்திற்கு மாறாக, கணவனை இழந்த மனைவிகள் தங்கள் கணவனோடு கூட கழிந்த நாட்களின் நினைவுகளோடு கூட, விதவையிருப்பில் தன் காலத்தைக் கழிக்க வேண்டுமென்பதே வேதங்களின் அறிவுரை என்பதையும் தெளிவுப்படுத்தினார். வித்தியாலங்கர் அளித்த வாக்குமூலம் சதி ஒழிப்பு போராட்டத்திற்கு வலுசேர்த்தது. அப்பொழுது இந்திய தேசத்தை ஆண்டுவந்த அரசாங்கம், கேரியின் வார்த்தைகளை பெரிதும் கவனத்தில் கொள்ளவில்லையெனினும் கூட, கேரி தன்னுடைய முயற்சியினைக் கைவிடவில்லை. வெளிநாட்டில் வசித்த தன்னுடைய நண்பர்களிடம் இதனை கடிதத்தின் மூலமாக பகிர்ந்து, அரசாங்கத்தின் மீது அழுத்தம் கொடுக்கும்படியாக அவர்களை பத்திரிக்கைகளில் எழுப்பும்படி கேட்டுக் கொண்டார். வில்லியம் கேரி ஆரம்பித்திருந்த செராம்பூர் மிஷன் சார்பாக வெளியிடப்பட்ட இரண்டு செய்திதாள்களான, **இந்தியாவின் நண்பன்** (the friend of India) மற்றும் **சமாச்சார் தர்பன்** (Samachar Darpan) ஆகியவை சதி ஒழிப்பு போராட்டத்தில் மிகவும் உறுதுணையாக நின்றது.



மிஷனெரிகளின் கடும் முயற்சி தோல்வியடையவில்லை. பல பத்திரிக்கைகளில் சதியினைக் குறித்து எழுதியதன் விளைவாக இங்கிலாந்து தேசத்தில்

சதிக்கு எதிராக குரல் வலுத்தது. தாமஸ் போவெல் புக்ஸ்டன் என்பவர் பாராளுமன்றத்தில் சதிக்கு எதிராக குரல் கொடுக்க ஆரம்பித்தார். இங்கிலாந்தில் இந்திய பெண்களை காப்பாற்றுவதற்காக சங்கங்கள் ஆரம்பிக்கப்பட்டு, அநாதையாக விடப்படும் குழந்தைகளுக்கு ஆதரவு கொடுக்கும்படி பணம் சேகரிக்கப்பட்டு அனுப்பப்பட்டது. சதியினால் பாதிக்கப்பட்ட குழந்தைகளுக்கு ஆதரவாக பாடல்கள் ஆன் டெய்லர் கில்பர்ட் என்பவரால் எழுதப்பட்டு, பிரிட்டிஷ் குழந்தைகளால் லண்டனிலுள்ள எக்ஸ்டர் ஹாலில் பாடப்பட்டது. 1829ம் ஆண்டு பெப்ருவரி மாதத்திலிருந்து இங்கிலாந்து தேசத்து 15 பெண்கள் சங்கங்களிலிருந்து சதியினை ஒழிக்கும்படியாக மனுக்கள் இந்தியாவை ஆளும் அரசிற்கு அனுப்பப்பட்டது. நெருக்கங்கள் அதிகரிக்கவே மிஷனெரிகள் எடுத்த முயற்சிகளுக்கு வெற்றி கிடைக்கும் வழி ஏற்பட்டது.

1828ம் ஆண்டு வில்லியம் பெனடிக் என்பவர் கவர்னர் ஜெனலராக நியமிக்கப்பட்டார். மிஷனெரிகளின் சதி ஒழிப்பு பேராட்டத்தினால் பெரிதும் கவரப்பட்ட வில்லியம், சதிக்கு எதிரான தடைவிதிக்க தீர்மானித்தார். பல இந்திய மதத்தலைவர்களையும், ஏனைய தலைவர்களையும் கலந்தாலோசித்துப் பிறகு 1829ம் ஆண்டு டிசம்பர் மாதம் சதிக்கு தடைவிதித்து சட்டம் இயற்றினார்.

1829ம் வருடம் டிசம்பர் மாதம் ஆறாம் தேதி ஞாயிறு ஆராதனைக்காக ஆயத்தமாகிக் கொண்டிருந்தார் வில்லியம் கேரி. அச்சமயம் அவர் சதிக்கு எதிராக இயற்றப்பட்ட சட்டத்தினைக் குறித்து கேள்விப்பட்டு அதிகமாக மகிழ்ந்தார். கேரி அச்சமயம் பெங்கால் அரசாங்கத்தின் மொழிப்பெயர்ப்பாளராகவும் இருந்த படியினால், ஆங்கிலத்திலிருந்த சட்டத்தினை பெங்கால் மொழியில் மொழிபெயர்ப்பது அவருடைய பணியாக இருந்தது. ஆலயத்திற்கு சென்று ஆண்டவரின் வார்த்தையினை போதிப்பதா அல்லது மொழிபெயர்ப்பதா என்ற இக்கட்டான சூழல் எழுந்தது. வில்லியம் கேரி ஆலயத்தில் போதிக்கும் பணியினை மற்றொருவரிடம் கொடுத்துவிட்டு, மொழிபெயர்க்க ஆயத்தமானார். தாமதிக்கும் ஒவ்வொரு நிமிடமும் ஒரு பெண்ணின் உயிர் ஆபத்தை நோக்கிச் சென்று கொண்டிருக்கும் எனவே அவர்களை அழிவிலிருந்து காப்பாற்ற வேண்டுமென போதிக்கும் பணியினை ஓரம் வைத்துவிட்டு சென்றார் கேரி. அன்று வில்லியம் கேரி இத்தகைய மாபெரும் முயற்சியினை எடுக்காதிருந்தாரானால் இன்றளவும் இந்திய தேசத்தில் ஆங்காங்கு சதி நடைமுறையில் இருந்திருக்கும்.

## தொழுநோய்க்கு எதிராக கேரி

தொழுநோய் குறித்து அதிகபடியான தெளிவு இல்லாத காலத்தில் மக்கள் பெரிதும் இந்நோயால் பாதிக்கப்பட்டிருந்தார்கள். கேரி கொல்கத்தா பகுதிக்கு ஊழியம் செய்ய வந்த காலத்தில் சதியினைப் போன்று அவரை பெரிதும் பாதித்த காரியம், தொழுநோயாளியை உயிருடன் எரிப்பது ஆகும். 1812ம் வருடம் ஒரு நாளில் வில்லியம் கேரி கண்ட காட்சி அவரை மிகவும் பாதித்தது. தொழுநோயால் பாதிக்கப்பட்ட ஒருவரை அவரது தாயாரும், அவரது சகோதரியும் இணைந்து ஒரு குழிக்குள்ளாக வைத்து நெருப்பினால் எரித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களிடத்தில் வேதனையுடன் விசாரித்த பொழுது அடுத்த பிறவியிலாவது சுகமுள்ளவர்களாக பிறக்க வேண்டுமென்பதற்காக செய்கிறோம் என்றார்கள். தொழுநோயாளிகளை காப்பாற்ற வேண்டுமென்கிற நல்லெண்ணத்தோடு கூட கல்கத்தாவிலே முதல்முறையாக தொழுநோய் மருத்துவமனையினை நிறுவி, தொழுநோயினால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு சிகிச்சை கொடுத்து அவர்களை சுகப்படுத்தி மறுவாழ்வு கொடுத்தார்.

## குழந்தை பலிக்கு எதிராக கேரி

மடமை முற்றிகிடந்த ஒரு காலம் கேரி ஊழியம் செய்த காலம். **குழந்தை பாக்கியத்திற்காக தவம் இருப்பவர்கள் ஒரு புறம் இருந்தாலும், குழந்தையை கொடுத்த கடவுளுக்கு அதனை திரும்ப கொடுக்கும் பழக்கம் அக்காலத்தில் காணப்பட்டது.** தாங்கள் தங்கள் தெய்வத்திற்கு செய்த பொருத்தனைகளை நிறைவேற்றும்படியாக குழந்தைகளை கங்கை நதியிலே தூக்கி வீசும் ஒரு சடங்கை கைக்கொண்டிருந்தார்கள். பிறந்து ஒரு சில நாட்கள் அல்லது மாதங்களான குழந்தைகள் பல பசியோடு காத்திருக்கும் முதலைகளுக்கே இறையானது. இரண்டு குழந்தைகள் ஒரு தாய்க்கு பிறக்குமானால், இரண்டில் ஒரு குழந்தையை தங்கள் இஷ்ட தெய்வத்திற்கு காணிக்கையாக நதியில் வீசிவிடுவார்கள். பிறந்த குழந்தை வியாதியோடு இருந்தாலும், தாய்பால் குடிப்பதற்கு மறுத்தாலும் அது அசுத்த ஆவியினால் பிடிக்கப்பட்டிருக்கிறது என்று கருதி அவற்றையும் தெய்வத்திற்கு காணிக்கையாக கொடுத்துவிடுவார்கள். கேரியின் நண்பரான ஜியார்ஜ் உட்னே என்பவர் அரசின் பொது கவுன்சில் உறுப்பினர் ஆனவுடன், குழந்தைகள் பலியிடப்படுவதை லாட் வெல்லஸ்லி என்பவருடைய கவனத்திற்கு கொண்டுவந்தார். உடனே, உண்மையை அறிவதற்கான பொறுப்பு வில்லியம் கேரியிடம் கொடுக்கப்பட்டது. வில்லியம் கேரி எந்த ஒரு புனித புத்தகத்திலும் இத்தகைய கொடிய காரியம் குறிப்பிடப்படவில்லை, எனவே இதை அனுமதிக்க முடியாது, உடனே தடை செய்யப்பட வேண்டுமென்று அவ்ஆய்வின் இறுதியில் பதில் அளித்தார். கேரியின் வார்த்தைகளை ஏற்றுகொண்ட அரசு உடனே குழந்தைகள் கங்கையில் தூக்கி எறியப்படுவதை தடை செய்தனர். அவ்வாறு செய்தால் அது கொலை குற்றமாகும் என்றும் அதனை செய்பவர்கள் மரண தண்டனைக்குள்ளாக்கப்படுவார்கள் என்றும் தீர்ப்பளித்தனர்.

## முடிவுரை

வில்லியம் கேரி என்ற மாமனிதனின் பெருமுயற்சியால் தான் மக்களிடம் ஊண்டு கிடந்த மூடப்பழக்கவழக்கங்களுக்கு முற்றுபுள்ளி வைக்கமுடிந்தது. வில்லியம் கேரி தன் சொந்த தேசத்தைவிட்டு தன் வாழ்வை இந்திய மக்களின் முன்னேற்றத்திற்காக அர்ப்பணித்த ஒரு புனிதர். அவரது குடும்ப வாழ்வில் பல இன்னல்களை சந்தித்தாலும், மக்கள் வாழ்வில் இருந்த பல இன்னல்களை வேரறுத்தவர். இன்றும் நம் திருச்சபைகளுக்குள்ளும் பல மூடபழக்கவழக்கங்கள் மண்டிக்கிடக்கின்றது. வேதம் அறிந்த கிறிஸ்தவர்களாக இருந்தாலும் கூட சாஸ்திர சம்பிரதாயங்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கும் கிறிஸ்தவர்களை வைத்துக் கொண்டு திருச்சபை திண்டாடிக்கொண்டிருக்கின்றது. திருச்சபை மற்றொரு கேரியை எதிர்பாராமல் கர்த்தர் அருளின வேத வசனத்தின்படி தன்னைத்தானே சுத்திகரித்துக் கொள்ள முயற்சிகள் மேற்கொள்ள வேண்டும்.

H. ஜாண் சாமுவேல்,
பண்டாரஞ்செட்டிவிளை

# தென்தமிழகத்தில் மூடப்பழக்க வழக்கங்களுக்கு முற்றுப்புள்ளி வைத்த கிறிஸ்தவ மிஷனரிகள்

தென் தமிழகத்தில் மூவேந்தர் ஆட்சிக் காலம் முதல் படிப்படியாக வந்த மூடப்பழக்க வழக்கங்கள் நாயக்கர் ஆட்சியின் போது உச்சக்கட்டத்தை அடைந்தன. திணிக்கப்பட்ட ஆரியக் கலாச்சாரம் மற்றும் சாதிய ஒடுக்குமுறை காரணமாகவும், மதம் சார்ந்த உயர் வகுப்பினரின் அழுத்தம் காரணமாகவும் மூடப்பழக்க வழக்கங்கள் வேகமாக தென்தமிழகத்தில் ஊடுருவியது. முற்றுப்புள்ளி வைத்த கிறிஸ்தவ மிஷனரிகள்

### கத்தோலிக்க கிறிஸ்தவ மிஷனரிகளின் பங்களிப்பு




16 ஆம் நூற்றாண்டில் தமது மிஷனரிப் பணியை தென் தமிழகத்தில் கடலோரப் பகுதிகளில் தொடங்கிய கத்தோலிக்க கிறிஸ்தவ மிஷனரிகள் கடல் சார்பு வாழ்வியலை மேற்கொண்டிருந்த கிழக்குக் கடற்கரை சார்ந்த மீனவ பரதவ சமூகத்தினர் மற்றும் மேற்கு கடற்கரை சார்ந்த மீனவ முக்குவ சமூகத்தினர் மற்றும் கரையர்கள் எனும் மீனவர் மத்தியில் காணப்பட்ட மூடப்பழக்க வழக்கங்கள் முற்றிலும் நீங்கும்படியான வாழ்வியலை **இயேசு சபை மிஷனரிகள்** கற்றுக் கொடுத்தனர். தங்களது மீன்பிடித் தொழிலுக்கும் முத்துக்குளித்தல் தொழிலுக்கும் உதவியாய் இருக்கிறது என்ற அளவில் அனேக மதம் சார்ந்த மூட பழக்க வழக்கங்கள் அவர்களது வாழ்வியலில் காணப்பட்டது. குலதெய்வ வழிபாடு எனும் சிறு தெய்வ வழிபாடு அவற்றில் முக்கியப் பங்கை வகித்தது. முத்துக்குளித்தலின் போது தீய ஆவிகளால் ஆபத்து ஏற்படாமல் இருக்க மந்திரவாதிகளைக் கொண்டு மந்திரவாதம் செய்யும் மூடப்பழக்கவழக்கம் மீனவர்களிடம் காணப்பட்டது. மந்திர வாதத்தினால் ஆவிகள் மூலம் கடலை கட்டுவதாக அவர்கள் எண்ணினர். இயேசு சபை மிஷனரிகள் தமது தலைமை இடத்திற்கு அனுப்பிய கடிதங்கள் மூலம் மீனவர் வாழ்வியலை அறியமுடிகிறது.

### மீனவர் வாழ்வியலில் மாற்றம்

1532 முதல் 1546 க்குள் ராமேஸ்வரம் முதல் திருவனந்தபுரம் வரையிலான மீனவ சமூகத்தினர் முழுவதும் கிறிஸ்தவராக மாறியவுடன் அவர்களது மூடப்பழக்க வழக்கங்களோடு இணைந்திருந்த குலதெய்வ வழிபாடு முற்றிலும் நீங்கும் படியாக கத்தோலிக்க கிறிஸ்தவ மிஷனரிகள் சிறப்பானதொரு கிறிஸ்தவ அடித்தளத்தை மீனவ கிராமங்களில் நிறுவினர். ஆதலால் இன்றுவரை ஒட்டுமொத்தமாக கிறிஸ்தவராக மதம் மாறிய அனைத்து மீனவ கிராமங்களிலும் அவர்களது முன்னோரின் குலதெய்வ வழிபாடு நிலை தற்போதைய தலைமுறையினருக்கு தெரியாத அளவில் தூய. சவேரியார் அவர்களை ஜெபத்தில் வழி நடத்தினார். அனுதினமும் அதிகாலையிலும் இரவிலும் மீனவ கிராமங்களில் ஜெபம் நடத்தப்பட்டது. அனைத்து மீனவ கிராமங்களிலும் குருசடி எனும் சிற்றாலயங்கள் அவரால் அமைக்கப்பட்டது.அவரைத் தொடர்ந்து வருகை தந்த இயேசு சபை மிஷனரிகள் மீனவ சமூகத்தினரை சிறப்பாக பக்திநெறியில் வழிநடத்தினர். மந்திரவாதத்தைக் காட்டிலும் ஜெபம் மேலானது என்பதை மீனவர் உணர்ந்தனர்.

### சீர்திருத்தக் கிறிஸ்தவ மிஷனரிகளின் பங்களிப்பு



பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் டென்மார்க் பேரரசர் நான்காம் பிரட்ரிக் அவர்களிடம் காணப்பட்ட மிஷனரி தாகம் காரணமாக ஜெர்மனியைச் சேர்ந்த சீகன்பால்க் மற்றும் புளுச்சோ ஆகியோர் ராயல் மிஷனரிகள் என்ற உயர் தகுதியோடு தரங்கம்பாடிக்கு அனுப்பப்பட்டனர்.

அக்காலம் முதல் சீர்திருத்த கிறிஸ்தவ மிஷனரிகளின் நற்செய்திப் பணி தமிழ்நாட்டில் தொடங்கலாயிற்று தரங்கம்பாடியில் இருந்து பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதிப்பகுதியில் தென் தமிழகத்தில் குளோரிந்தா அம்மையார், சின்னமுத்து என்ற தாவீது சுந்தரானந்தம், மகாராசன் வேதமாணிக்கம், சாமுவேல் சாயர், கனம். கோலாப்வ் ஆகியோரின் அழைப்பின் பேரில் கனம்.சுவார்ட்ஸ் ஐயரவர்களால் கனம். சத்தியநாதன், கனம். ஜெனிக்கே, கனம். ஜெரிக்கே, கனம். ரிங்கல்தௌபே ஆகிய மிஷனரிகள் அனுப்பப்பட்டனர்.

கனம்.ஹாய்வ் இராணுவ குரு பணியோடு நற்செய்தி அறிவிப்பு பணியையும் சிறப்புடன் செய்தார். இராணுவ குரு. கனம்.ஹாய்வ் ஐயரவர்களின் அழைப்பின் பேரில் தொடங்கப்பட்ட பாளையங்கோட்டை CMS பணித்தளத்திற்காக சென்னையிலிருந்து அனுப்பப்பட்ட நெல்லை அப்போஸ்தலர் கனம். ரேனியஸ் ஐயரவர்கள் அவரைத் தொடர்ந்து அனுப்பப்பட்ட பெற்றிட் சாப்டர், சார்ஜென்ட், உவாக்கர், கார் போன்ற அனைத்து CMS மிஷனரிகள், ரிங்கல்தௌபேக்குப் பின்னர் அனுப்பி வைக்கப்பட்ட SPCK, SPG மிஷனரிகள் கனம்.ரோஷன், கனம்.கேமரர், கனம். கால்டுவெல் கனம்.பிரதர்ட்டன், கனம்.ஸ்ட்ராஹன், கனம்.மார்காஷிஸ், போன்றோரும் தென் தமிழக மூடப்பழக்க வழக்கங்களுக்கு முற்றுப்புள்ளி வைப்பதில் முன்னணியில் நின்றனர்.

### சாதிக்கலவரத்தின் போது சமபந்தி உணவு

சாதிக்கலவரம் எனும் மூடப்பழக்கம் பரவிவிடக்கூடாது என்பதற்காக சிவகாசி கலவரம் 1899 இல் நடைபெற்ற போது அது

மேல் நெல்லை வரை பரவியது. அது கீழ் நெல்லை மற்றும் தென் நெல்லையில் பரவிவிடக்கூடாது என்பதற்காக பல்வேறு சமூகத்தினரை தமது நாசரேத் பங்களாவில் 06.01.1900 அன்று ஒன்றாக அமரச்செய்து சமபந்தி உணவு என்னும் ஐக்கியத்தை கனம்.மார்காஷிஸ் ஐயரவர்கள் நடத்திக் காட்டினார்.

### பனைத் தொழிலாளர்கள் மத்தியில் அரும் பணி

சீர்திருத்த கிறிஸ்தவ மிஷனரிகளின் பணிகள் பெரும்பாலும் தென்தமிழகத்தில் நாடார் சமூக மக்கள் மத்தியில் காணப்பட்டது இவர்கள் தென்தமிழகத்தில் தங்களது வாழ்வாதாரத்தை பனையேறும் தொழில் மூலமும், விவசாய பணியின் மூலமும், வணிக பணியின் மூலமும் நடத்தி வந்தார்கள். பதநீர் சீசன் காலங்களில் அடர்ந்த பனைமரக் காடுகளில் ஆறு மாதம் தங்கியிருந்து பனைமரம் ஏறி பதநீர் இறக்கும் பணி, கருப்பட்டி தயாரிக்கும் பணியைச் செய்தனர். இப்பணி ஆபத்து மிக்கதாக இருந்த படியினாலும் பனை மரங்கள் ஊரைவிட்டு வெளியே காணப்பட்ட படியினாலும் அவர்களது வாழ்வியலில் ஆவிகளுக்குப் பயந்ததான அனேக மூடப்பழக்க வழக்கங்கள் காணப்பட்டன. ஆவிகள் தமக்கு உதவ வேண்டும் தீய ஆவிகள் தம்மை அணுகக் கூடாது என்ற அடிப்படையில் மந்திரவாதங்களுக்கும், பில்லி சூனியங்களுக்கும் ஏவல்களுக்கும் பேய்களுக்கும் அவற்றைப் பயன்படுத்தி வந்த மந்திரவாதிகளுக்கும் இவர்கள் அஞ்சினர் இவர்களின் வாழ்வியல் கலாச்சாரம் குறித்து ஆய்வு செய்து 1849 இல் நூல் வெளியிட்ட பேராயர் மகாகனம் கால்டுவெல் அவர்கள் அந்நூலில் இதைக் குறிப்பிடுகிறார்கள்.

### நள்ளிரவு சாமக்கொடை எனும் கொடை விழா

பனையேறும் தொழில் செய்த இவர்கள் தாங்கள் வழிபட்ட குல தெய்வங்களுக்கு ஆண்டுதோறும் சாமக்கொடை எனும் கொடை விழாக்களை நள்ளிரவில் நடத்தி வந்தார்கள். இவர்கள் மத்தியில் நற்செய்திப் பணியை சிறப்பாக செய்த நெல்லை அப்போஸ்தலர் கனம். ரேனியஸ் ஐயரவர்கள் இரவு நேரங்களிலும் தமது ஊழியத்தைத் தொடர்ந்தார்.

தீவட்டி வெளிச்சம் பெரிதாக தெரிந்தால் அது நள்ளிரவு சாமக்கொடை என்றெண்ணி அந்த இடத்திற்கு சென்று அங்கு கொடைவிழாவில் பெரும் திரளாக கூடியிருந்த இந்த சமூக மக்கள் மத்தியில் கிறிஸ்தவ நற்செய்தியை துணிவோடு பிரசங்கித்தார் அநேக வேளைகளில் ரேனியஸ் ஐயரவர்கள் வந்தபோது கொடை விழாக்களில் சாமிகள் வராத சூழ்நிலை ஏற்பட்டது அதைக் கண்ட பெருந்திரளாகக் கூடியிருந்த மக்கள் தாங்கள் வழிபடும் குல தெய்வங்களைக் காட்டிலும் இந்த வெள்ளைக்காரர் சொல்லுகிற நற்செய்தியில் உள்ள இயேசுகிறிஸ்து மேலான கடவுள் என்பதை புரிந்து கொண்டார்கள். அவர்களது வாழ்விடங்களில் தேவாலயம் கட்டப்பட்டது. அதிகாலையிலும் இரவிலும் அநுதினமும் அருட்செய்தியுடன் ஜெபம் நடத்தப்பட்டது அவர்கள் மத்தியில் பள்ளிக்கூடங்கள் திறக்கப்பட்டது இவர்கள் மத்தியில் காணப்பட்ட அனேக மூடப் பழக்க வழக்கங்களுக்கு ரேனியஸ் ஐயரவர்களாலும் அவர்களைத் தொடர்ந்து வந்த சி.எம்.எஸ். & எஸ்.பி.ஜி மிஷனரிகளாலும் தொடர்ந்து கொடுக்கப்பட்டு வந்த போதனைகளால் முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது.

## கிறிஸ்தவ பெண் மிஷனரிகளின் சிறப்புப் பணி

### தேவதாசி முறை ஒழிப்பு

வட இந்தியாவில் பண்டித ரமாபாய் போன்று தென்தமிழகத்தில் ஏமி கார்மிக்கேல் அம்மையார் பெண்கள் மத்தியில் காணப்பட்ட பொட்டு கட்டுதல் என்னும் தேவதாசி முறையை முற்றிலும் ஒழிப்பதில் அரும்பாடுபட்டார். ஏமிகார்மிக்கேல் அம்மையாரின் பணி 1896 இல் தொடங்கி 1951 வரை சிறப்பாக நீடித்தது. 1896 முதல் 1900 வரை பண்ணைவிளையை தலைமையிடமாகக் கொண்டு தலைமை மிஷனரியாகப் பணி செய்த தாமஸ் உவாக்கர் ஐயரவர்களுடன் இணைந்து கிராமம் கிராமமாக நற்செய்தி பணியாற்றினார். அந்நேரம் கைவிடப்பட்ட பெண்கள் அநேகர் ஏமிஅம்மையாருடன் இணைந்தனர். இவ்வாறு இணைந்த அனைவரும் **'நட்சத்திர கூட்டத்தார்'** என்றழைக்கப்பட்டனர்.


CLIMBING THE PALMYRA TREE.

1900 முதல் டோனாவூர் தலைமை மிஷனரியாக கனம் தாமஸ் உவாக்கர் ஐயரவர்கள் சென்றபோது அம்மையார் அவர்களும் தமது ஊழிய தலைமையிடத்தை டோனாவூருக்கு மாற்றினார்கள். டோனாவூரின் குளிர்ச்சியான தட்பவெப்பநிலை அம்மையாருக்கு ஏற்றதாக இருந்தது. தேவதாசி பெண்களுக்கும், கைவிடப்பட்ட பெண்களுக்கும், பெண்குழந்தை என்பதற்காக வீசி எறியப்பட்ட குழந்தைகள் தேவதாசி பெண்களுக்கு முறையற்ற உறவால் பிறந்த குழந்தைகள் பெற்றோரை இழந்த குழந்தைகள் என அனைவருக்கும் அடைக்கலம் தரும் புகலிடமாக ஏமி கார்மிக்கேல் அம்மையாரின் டோனாவூர் நட்சத்திர கூட்டம் காணப்பட்டது. 1951 இல் தாம் மரணம் அடையும் வரை இப்பணியைச் சிறப்புடன் செய்தார்.

### பெண் கல்வியைத் தடை செய்த மூடப்பழக்கவழக்கம்

**அடுப்பூதும் பெண்களுக்கு கல்வி எதற்கு?** என்ற மூடப்பழக்க வழக்கத்திற்கு எலைசா கால்டுவெல்,இசபெல்லா வயலட், மேரி சார்ஜென்ட், அஸ்போன் சகோதரிகள், ஜோகன்னா மீட், மார்த்தா மால்ட், கேதரின் முல்லர் போன்ற பெண் கிறிஸ்தவ மிஷனரிகள் களம் இறங்கி முற்றுப்புள்ளி வைத்தார்கள். பெண்களுக்கான கல்விப் பணிகளில் நேரடியாக ஈடுபட முடியாத சாராள் டக்கர் அதற்கென பண உதவிகளைச் செய்தார்.

### சாதியம் சார்ந்த மூடப்பழக்கவழக்கம்

தற்போதைய கன்னியாகுமரி மாவட்டத்தில் சாதியம் சார்ந்த மூடப்பழக்க வழக்கமாக தாழ்த்தப்பட்ட பிற்படுத்தப்பட்ட வகுப்பு பெண்கள் தமது மார்பகத்தை மறைத்து ரவிக்கை அணியவும் மேலாடை அணியவும் தடை இருந்தது. இந்த சூழ்நிலையில் ஜோகன்னா மீட், மார்த்தா மால்ட் ஆகிய பெண் மிஷனரிகள் தையல் கற்றுக் கொடுத்து பெண்கள் தங்களுக்கான ரவிக்கைகளை தாங்களே தைத்துக் கொள்ளும் சூழ்நிலையை உருவாக்கியதோடு அவற்றை அணிந்து தேவாலயங்களுக்கும் சந்தைகளுக்கும் செல்வதற்கு ஊக்கம் அளித்தனர்.

### மூடப்பழக்க வழக்கத்துக்கு எதிரான மூன்று கட்ட தோள்சீலைப் போராட்டம்

தாழ்த்தப்பட்ட பிற்படுத்தப்பட்ட வகுப்பு பெண்கள் தமது மார்பகத்தை மறைத்து ரவிக்கை அணியவும் மேலாடை அணியவும் அரசு தடை விதித்து இருந்தது. இந்த சூழ்நிலையில் ஜோகன்னா மீட், மார்த்தா மால்ட் ஆகிய பெண் மிஷினரிகள் தையல் கற்றுக் கொடுத்து பெண்கள் தங்களுக்கான ரவிக்கைகளை தாங்களே தைத்துக் கொள்ளவும் அவற்றை அணிந்து தேவாலயங்களுக்கும் சந்தைகளுக்கும் செல்லவும் ஊக்கம் அளித்தனர். நம்பூதிரிகளும் நாயர்களும் அதை எதிர்த்தனர். இவற்றுக்கெல்லாம் முற்றுப்புள்ளி வைக்க 1822-1823, 1828-1829, 1858-1859 என மூன்று கட்டங்களாக **"தோள்சீலைப் போராட்டம்"** நடைபெற்றது. அந்தப் போராட்டத்தை கிறிஸ்தவ LMS மிஷனரிகளே முன்னெடுத்துச் சென்றனர்.

### தென் தமிழகத்தில் மிஷனரிகளால் பெரும்பாலும் ஒழிக்கப்பட்ட மூடப்பழக்க வழக்கங்கள்

பாலிய திருமணம், பெண் சிசு படுகொலை, பொட்டு கட்டுதல் எனும் தேவதாசி முறை ஆகியவற்றுக்கு முழுமையாக முடிவு கட்டப்பட்டு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது. நாள் மற்றும் நேரம் பார்த்தல், சகுனம் பார்த்தல், குழந்தைகள் பிறந்ததும் ஜாதக கட்டத்துடன் ஜாதக கணிப்பை ஜோசியரிடம் பெறுதல், வாஸ்து பார்த்தல் போன்ற மூடப்பழக்கங்கள் பெருமளவில் ஒழிக்கப்பட்டு விட்டது. திருமண நிகழ்ச்சிகளில் கணவரை இழந்த பெண்களுக்கு முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது. செவ்வாய், சனி நாட்களில் திருமணம், திருமணம் உறுதி செய்தல், பூப்புனித நீராட்டு விழா, புதுமனைப்புகுவிழா போன்ற சிறப்பு நிகழ்வுகள் நடத்தப்படுகின்றன.

கிறிஸ்தவ மிஷனரிகளின் வருகையினால் தென்தமிழகத்தில் காணப்பட்ட மூடப்பழக்க வழக்கங்களுக்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டுள்ளது என்பதில் மாற்றுக்கருத்து ஏதுமில்லை.

**J.ஜான் ஞானராஜ்,கல்லிடைக்குறிச்சி**



## "தலையே போனாலும் சுவிசேஷத்தை விட்டுப் போகவேமாட்டேன்"



1851 ம் ஆண்டு ஜான் தாமஸ் ஐயர் புளியங்குளத்துக்குச் சென்றார். அந்தச் சபையில் முதலாவது 15 குடும்பத்தார் இருந்தனர். ஆனால் நாட்டாண்மைக்காரர் கொடுத்த கொடிய துன்பங்களைச் சகிக்கக் கூடாமல், ஏழு குடும்பத்தார் பின்வாங்கி விட்டனர். ஒரு குடும்பம் மறுதலிக்கும் நிலையிலிருந்தது. மீதிப்பேர் உறுதியாயிருந்தனர். அவர்களுக்கு ஆராதனை நடத்தினார். பின், சபையாரில் ஒருவர் ஒரு தகட்டை அவரிடம் காட்டி, பகைவரில் ஒருவன் அவருடைய நிலத்தில் பயிர் பயன் கொடா திருக்கும்படி புதைத்துவைத்த பில்லிசூனியத் தகடு அது என்று கூறி, 'ஐயா, அவர்கள் என்ன செய்ய வேண்டுமோ, செய்யட்டும், என் **"தலையே போனாலும் சுவிசேஷத்தை விட்டுப் போகவேமாட்டேன்"**, என்றார். தாமஸ் அவ்வேழைக் கிறிஸ்றிஸ்தவர்களைத் தைரியப்படுத்தி, உற்சாகமூட்டி, ஆசீர்வதித்தார்.



# கிறிஸ்தவ மதிப்பீடுகளுக்காக திறப்பில் நின்ற பிரிட்டீஷ் உயர் அதிகாரிகளும், கிறிஸ்தவ திருத்தொண்டர்களும்

கண்மூடி மூடப்பழக்க வழக்கங்கள், சாதிக் கொடுமைகள் முதலியவற்றை முதன்முதலாகத் தட்டிக் கேட்டவர்கள், தங்கள் புஜபல பராக்கிரமத்தால் தடுத்து நிறுத்தியவர்கள் ஆங்கிலேய இராணுவத்தினரும், அதிகாரிகளுமே ஆவர். மன்னர் முதல் ஆண்டி வரை பயந்து மீறமுடியாதபடி பின்பற்றி வந்த சாதீயத்தின் மீதும், மூடப்பழக்க வழக்கங்கள் மீதும், தங்கள் தாக்குதல்களைத் தொடுத்தவர்கள் அந்த ஐரோப்பிய ஆதிக்க பிரஜைகள் தான். ஐரோப்பாவிலும் இங்கிலாந்திலும் தாங்கள் அனுபவித்த சமூக நீதி, சமத்துவம் இங்கே நசுக்கப்படுவதைப் பார்த்து கொதித்தவர்கள் அவர்கள். கிறிஸ்தவ நம்பிக்கைகளுக்கு எதிரான அனைத்து விஷயங்களிலும் அவர்கள் தங்கள் மனசாட்சியின் குரலை உயர்த்தியே வந்திருப்பதை நாம் வரலாற்றின் ஏடுகளில் படிக்கலாம். சில சமயங்களில் ஆங்கில அரசாங்கம் அரசியல் காரணங்களுக்காக கிறிஸ்தவ நம்பிக்கைகளுக்கு எதிராக பணி செய்ய நிர்பந்தித்த போது துணிந்து திறப்பில் நின்று கிறிஸ்துவிற்கு சாட்சியாக தீங்கனுபவித்து துணிவுடன் நின்றது சரித்திரம் சொல்லும்.

**திரு. கேத்கார்ட் - மனசாட்சியின் குரல்!**

கி. பி. 1832 ஆம் ஆண்டு ஜூலை மாதம் சேலம் மாவட்டத்தில் சப்-கலெக்டராக நியமிக்கப்பட்ட துடிப்புள்ள நேர்மையான இளைஞன்தான் திரு. கேத்கார்ட் (Mr. Cathcart). அப்பொழுது மழை இல்லாத பஞ்சகாலம் சேலம் மாவட்டம் முழுவதும் வறட்சி நிலவியது. மழைக்காக **'வருண ஜெபம்'** செய்ய ஒவ்வொரு தாலுக்காவிலும் ஜெபம் செய்ய ஒவ்வொரு தாலுக்காவிற்கும் 50 ரூபாய் வீதம் ஆங்கிலேய அரசாங்கம் நிதி ஒதுக்கியிருந்தது. அப்பொழுது சேலம் மாவட்டத்தின் 14 தாலுக்காவிலும் அந்தந்த பகுதியின் சப்-கலெக்டர் துரையின் தலைமையில் **'வருண ஜெபம்'** செய்ய அந்தந்த ஊரில் உள்ள பிராமணர்களுக்கு அழைப்பு விடுக்கப்பட்டது. இந்த ஏற்பாட்டை வன்மையாக எதிர்த்துக் குரல் கொடுத்தார் சப்-கலெக்டர் கேத்கார்ட், இருந்தாலும் மாவட்ட கலெக்டரின் உத்தரவுபடி திட்டம்

அரசின் ஆணையாக நிறைவேறியது.

அரசாங்க ஆணைகளை நிறைவேற்ற எதிர்ப்பு தெரிவித்து தனது பணிகளைச் செய்யவில்லை என காரணம் காட்டி செங்கல்பட்டு பகுதிக்கு மாற்றல் உத்தரவு வந்தது. இதில் சற்றும் தளராத திரு. கேத்கார்ட் செங்கல்பட்டிற்குச் சென்று பொறுப்பை ஏற்றுக் கொண்டார். ஆனால், அங்கும் ஆங்கிலேய அரசாங்கத்தின் கிறிஸ்தவ விரோத போக்கைக் கண்டித்து, மேலாதிக்கம் அரசியல் லாபங்களுக்காக செய்யும் தவறுகளைச் சுட்டிக்காட்டி பேசியும் எழுதியும் வந்தார். இதனால் கோபம் கொண்ட ஆங்கிலேய அரசு நிர்வாகம் திரு. கேத்கார்ட் அவர்களை கஞ்சம் (Ganjam) பகுதிக்கு மாற்றியது. பொறுப்பை ஏற்றுக்கொள்ள பல நாட்கள் பல்லக்கு பயணமாக கொடிய வெய்யிலில் பயணித்து பெர்காம்பூர் என்ற இடத்தில் வந்தடைந்த போது, அங்கே உயிர்கொல்லி நோயான காலரா தாக்கி, பல்லக்கில் பயணித்தவாறே உயிர்துறந்தார். அப்பொழுது அவருக்கு வயது 28.

> அவர் பார்வையற்றவர்களுக்கு விழியாகவும், தாய் தந்தையற்ற அனாதைகளுக்கு ஏற்ற தந்தையாகவும் இருந்தார்

**சத்தியத்தின் சாட்சி:**

சேலம் பகுதிகளில் அவர் பொறுப்பில் இருந்தபோது - அதாவது 1832 ஜூலை முதல் மே 1833 வரை சேலம் மக்கள் மனதில் ஒரு நிரந்தர இடத்தைப் பெற்றிருந்தார் கேத்கார்ட் அவரைப் பற்றிச் சொல்லும்போது அவர் ஒரு நேர்மையான கலெக்டர், மக்கள் குறைகளைக் கேட்டு அதற்கு உடனடியாக நிவாரணம் செய்வதில் அவருக்கு நிகர் அவரே! எல்லாத்தரப்பு மக்களும் அவரது இந்த தொடர் மாறுதல், மற்றும் அகால மரணம் பற்றி அறிந்து வேதனையடைந்து கண்ணீர் வடித்தனர். அப்பொழுது சேலம் மாவட்டத்தில் லண்டன் மிஷன் மிஷனெரியாக திருத்தொண்டாற்றி வந்த சங்கை ஜார்ஜ் வால்டன் ஐயர் (Rev. George Walton. L. M. S.) சப்-கலெக்டர் கேத்கார்ட் அவர்களைப் பற்றிச் சொல்லும் போது: **'அவர் பார்வையற்றவர்களுக்கு விழியாகவும், தாய் தந்தையற்ற அனாதைகளுக்கு ஏற்ற தந்தையாகவும் இருந்தார்'** என்றார்.

("In those days the East India Company gave open support to Hinduism and Islam, and the government officials were expected to countenance idolatry. Cathcart would not so compromise his faith, and was transferred in consequence to the penal settlement as Rev. W. Robinson calls it, of Berhampur. On the way there he died in his palanquin, deeply mourned and long remembered by Hindus and Christians alike." - Page no. 5, A Hundred Years of Salem Mission History - Rev. T. C. Witney, B. A. , 1936. )

**ஆங்கிலேயர் ஆட்சி - மிஷனெரிமார்களின் எதிர்ப்பு:**

புரோட்டஸ்டாண்டு பாதிரிமார்களைக்கூட அழையா விருந்தாளிகளாக பார்த்தனர் **கும்பினி** அரசாங்கத்தினர். வர்த்தகம் ஒன்றே பிரதானம் என்பதில் உறுதியாய் நின்ற கும்பினியர், பாதிரிமார்கள் சந்தை கூடும் இடங்களிலும், பண்டிகைக் காலங்களில் கோவில் முன்பும், சுவிசேஷப் பிரசங்கம் செய்வதையும் ஆட்சியாளர்கள் வெறுத்தனர். இதைவிட விநோதம் பெரும் இந்து யாத்திரை கூட்டங்களுக்கு ஆங்கில அரசாங்கம் பாதுகாப்பு அளித்தது. இந்துக்கள் கும்பினி இராஜ்ஜியத்தின் மீது நல்லெண்ணம் கொள்ள வேண்டும் என்ற கருத்தோடு இதுபோன்ற காரியங்கள் செய்யப்பட்டது மட்டுமல்லாது, பக்தியும் உண்மையுமுள்ள ஆங்கிலேய உயர் அதிகாரிகள் தங்கள் நம்பிக்கைகளுக்கு எதிராக செயல்படும்படி வற்புறுத்தப்பட்டனர்.

இந்து மத கோவில் காப்பாளர்களுக்கும், கோவில் சொத்து நிதி முதலாவற்றிற்கும் பாதுகாப்பும் அளிக்கப்பட்டது. இவற்றை கிறிஸ்தவ மிஷனெரிமார்கள் வன்மையாக எதிர்த்தனர். (பக்கம் 84, சேலம் மேற்றிராசன சரித்திரச் சுருக்கம் - சங்கை. M. S. ஜோசப் அடிகள், 1958)

**முடிவுரை:**

ஆங்கிலேயர்களின் ஆட்சிக்காலத்தில் மிஷனெரிமார்களும், பக்தியும் உண்மையுமுள்ள ஆங்கிலேய உயர் அதிகாரிகளும், கிறிஸ்தவ மதிப்பீடுகளுக்கு சாட்சி பகர்ந்தது மட்டுமல்லாது பாதிக்கப்பட்ட மக்கள் பக்கமும் நின்றனர். மூடநம்பிக்கைகளுக்கும், சாதி நெறிமுறைகளுக்கும் ஆங்கிலேய ஆதிக்கம் துணைபோன போதெல்லாம் துணிவுடன் எதிர்த்தவர்கள் மிஷனெரிமார்களும், நேர்மையும் உண்மையும் கொண்ட உயர் அதிகாரிகளும்தான். திரு. கேத்கார்ட் போன்றவர்கள் வரலாற்றின் பக்கங்களில் சத்தியத்தின் சாட்சிகளாய் ஜொலிக்கிறார்கள்.

**சேலம் வரலாற்றுச் சங்கத்திற்காக,**
**ஜே. பர்னபாஸ்**

# Greetings!

I would like to express my deep appreciation for your efforts to recollect and record the impact of the gospel of Jesus and the contributions of Christianity in India. This will inspire the future generations to continue such good works and bring about transformation.



Best wishes
Dr.Moses Manohar- ICSA




# அறியாமை அகற்றலில் மிஷனெரிகளின் பங்கு!!

இருபத்தொன்றாம் நூற்றாண்டில் மருத்துவத் துறையின் அபார வளர்ச்சியிலும் கொரோனா எனும் வெற்றுக் கண்ணிற்குப் புலப்படாத வைரசின் வீரியம் உலகின் அறிவியல் வளர்ச்சியை விழுங்கி ஏப்பம் விட்டுக் கொண்டிருப்பது மனித இனத்தின் மற்றுமொரு பெருமுயற்சியோடான முன்கட்ட தோல்வி எனலாம்.

இதற்குப் பலியான மனித உயிர்களின் எண்ணிக்கை மிக அதிகம். ஒரே நாளில் இலட்சக்கணக்கான மக்களைக் கொன்று குவித்த சுனாமி எனும் பேரலையிலும் கேடு மிகுந்த இந்த கொரோனா அலை நின்று கொல்லும் அகோர தன்மை அபாயகரமானது..!! தொற்றிக் கொண்டோரைத் தப்பிக்க விடாமல் திண்டாட செய்யும் இந்தத் தொற்று ஒருவகைக் கொள்ளை நோய். இத்தகைய உயிர்க் கொல்லிநோய் மனிதச் சமூகத்தில், நமது வரலாற்றுப் பார்வைக்கு எட்டியவரை பல்வேறு வகையான நோய்கள் உயிர்க் கொல்லிகளாக வந்து சூரையாடி, பின்னர் எளிய மருந்துகளால் அடங்கி போயிருக்கின்றன.

குறிப்பாக வயிற்றுப் போக்கு, பெரியம்மை, எய்ட்ஸ், சார்ஸ், ப்ளூ, போன்றன நம் மனித இனத்தை கதிகலங்க வைத்தவற்றுள் முக்கியமானவை. சிலவகைத் தொற்றுகளுக்கு இன்னும் மருந்துகள் கண்டுபிடிக்கப்படாமலேயே சாவைத் துரத்தியடித்து அதோடு வாழ்வை மேற்கொள்ள நமது உடலும் உள்ளமும் கற்றுக் கொண்டதும் மனித சிறப்பியல்புகளுள் ஒன்று.

இந்தக் கொரோனா கொள்ளை நோயோடும் அப்படி வாழ்ந்து சமாளிக்கலாம் என்ற முயற்சியை மேற்கொள்ளத் துணிந்த போதுதான் பேரலையாய் இரண்டாம் அலை எழும்பி நமது இந்தியத் தேசத்து மக்களை சாதி மத பேதம் பாராமல் ஒருசேர வீழ்த்தியது. இதை சமத்துவக் கொடூரம் என்று விம்முகிறது என் மனம்.!

உலகில் எங்கோ ஓரிடத்தில் மனிதர்களுக்கு ஏற்படும் ஒருவகையான நோய் பின்னர் பல இடங்களுக்கும் நாடுகளுக்கும் பரவி மனித முயற்சிகளினால் கட்டுப்படுத்த முடியாமல் உயிர்களை காவு வாங்கும் இத்தகைய தொற்று நோய்களுக்கு கொள்ளை நோய்கள் என்று பெயர்.

காலரா நோய், 19 ஆம் நூற்றாண்டில் பல மில்லியன் கணக்கான மக்களை கொன்று குவித்தது. வங்காளத்தில் தோன்றிய இத்தொற்று 1820 ல் இந்தியா முழுவதும் பரவியது. 1817- 1860 க்கு இடையில் இந்தியாவில் மட்டும் 15 மில்லியனுக்கும் அதிகமானோர் இறந்தனர். 1865- 1917 ஆம் ஆண்டிற்கு இடையில் 23 மில்லியனுக்கும் அதிகமானோரை அழித்து போட்டிருக்கிறது இந்நோய். 1892 ல் வோல்ஃப் காஃப்கின் என்னும் ரஷ்ய விஞ்ஞானி கண்டுபிடித்தப் பின்னர் தான் இதன் மும்முரம் முழுமையாக நின்றது.

இத்தகைய சூழ்நிலைகளில் கிறித்தவ மிஷனெரிமார்கள் தங்களது இன்னுயிரைக் குறித்து எந்தக் கவலையும் படாமல் சாதி, மதம் என்ற எவ்வித வேறுபாடும் பாராமல் மருத்துவ உதவிகள்

அளித்தும், நோயைக் குறித்த விழிப்புணர்வை ஏற்படுத்தியும் மக்களைக் காத்தனர். அறியாமையினால் இத்தகைய கொள்ளை நோய்களிலிருந்து தப்பும் வழிகளை அறியாமல் மாண்டோர்தான் புவியில் ஏராளம்.

### துண்டுப் பிரதி

கிறித்தவச் சமயப்பணி செய்யும் நோக்கோடு இந்தியாவிற்குள் வந்த இரேனியஸ் என்ற மிஷனெரி 1818-ல் சென்னையில் ஏற்பட்ட பயங்கர காலரா நோயின் போது காலரா நோய்த்தடுப்புப் பற்றி ஒரு துண்டுப் பிரதி எழுதி அதை அச்சிட்டு மக்களுக்கு கொடுத்தார். கல்வியறிவு குறைந்த அக்காலகட்டத்தில்



அனைவராலும் வாசிக்க இயலாது. எனவே தாம் பயிற்று வித்த வாசிக்கக் கற்றோரை கிராமங்களுக்குள் அனுப்பி அந்தப் பிரதியை வாசித்துக் காட்டி விழிப்படையச் செய்தார்.

### விழிப்புணர்வு பிரச்சாரம்

1832 ஆம் ஆண்டு திருநெல்வேலி மாவட்டத்தில் பரவிய மிகக் கொடூரமான காலரா நோயிலிருந்து தப்பும் எளிய வழிமுறைகளை விழிப்புணர்வு கூட்டங்கள் நடத்தி மக்களுக்கு அறிவித்தார் இரேனியஸ், அத்தோடு கிறித்தவ சபைகளில் குருமார்கள், ஆசிரியர்கள் மற்றும் உபதேசிகர்கள் மூலமும் விழிப்புணர்வை எற்படுத்தினார். இதனால் கிறித்தவர்கள் காலரா நோயினால் இறப்பது குறைந்தது. அதிலும் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள டோனாவூரில் இவ்வாண்டில் கிறித்தவர்கள் ஒருவரும் இறக்கவில்லை. இதனால் மற்ற மதத்தினரில் நிறையபேர் கிறித்தவத்திற்கு மாறினர் (டி. கிறிஸ்துதாஸ், திருநெல்வேலி அப்போஸ்தலர் ரேனியஸ்) என்பதும் குறிப்பிடத்தக்கது.

### கைவிளக்கேந்திய காரிகை

20 ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் டோனாவூர் என்ற ஊரில் சமயப்பணியோடு சமுதாயப்பணியுமாற்றிய வீரமங்கை ஏமிகார்மைக்கேல், காலரா நோயினால் உயிரிழந்து கொண்டிருந்தோரை வீடுதேடிச் சென்று விழிப்புணர்வை ஏற்படுத்தியதோடு மருத்துவ தாதியரை உடன் அழைத்துச் சென்று மருத்துவம் பார்த்திருக்கிறார். உறவினர்களும் காலராவிற்குப் பயந்து ஒளிந்து கொண்ட நேரத்தில் தனது குழுவினரோடு உயிரையும் பணையம் வைத்துச் சமூகப் பணியாற்றினார்.

பெண்கள் பகலிலும் வீட்டை விட்டு வெளியில் செல்வது பெருங்குற்றமாக பார்க்கப்பட்ட அக்காலக் கட்டத்தில் ஏமிகார்மைக்கேல் இரவு நேரத்திலும் மின் விளக்குகள் இல்லாத கிராமங்களில், தனது கையில் **லாந்தர் விளக்கை** ஏந்தியபடி மரணத்தோடு போராடிக் கொண்டிருந்தோரின் கதவைத் தட்டி மருத்துவச் சிகிச்சை அளித்திராவிட்டால் இன்று வரைத் தொடரும் பல சந்ததிகள் அன்றே வேரறுந்து போயிருக்கும். இவர் **தென் தமிழகத்தின் கைவிளக்கேந்திய காரிகை.**

### தாய்ப்பால் கேட்டழுதத் தாரகை

பல்வேறு காரணங்களால் கைவிடப்பட்டப் பெண் குழந்தைகளையும், பாலியல் தொழிலாய் மாறிப் போயிருந்த தேவதாசிமுறைக்கு அற்பணிக்கப்பட்டிருந்த பெண்குழந்தைகளையும் மீட்டு, தம் காப்பகத்தில் வைத்துக் காப்பாற்றிய ஏமிக்கார்மைக்கேல் அக்குழந்தைகளுக்கும் அவரே தாயானார்.!

சாதி, மதம் என்னும் பெரும்பேய்ப் பிடித்தாடிக் கொண்டிருந்த அக்காலக் கட்டத்தில், தம்மால் பாதுகாக்கப்பட்ட குழந்தைகளுக்குத் தாய்ப்பால் கொடுப்பதற்காக டோனாவூரின் வீதிகளிலும் அதைச் சுற்றிய கிராமங்களிலும் தாய்ப்பால் ஊட்டும் தாய்களை வருந்தி அழைத்தும் வராமல், **'எந்தச் சாதியென்றே தெரியாத குழந்தைகளுக்கு எங்கள் வீட்டுப் பெண்கள் தொட்டு தாய்ப் பால் கொடுக்க விட மாட்டோம்'** என்று துரத்துயடிக்கப்பட்டார், ஏமிகார்மைக்கேல். பிறந்து சில நாட்களே ஆகியிருந்த பச்சிளங்குழந்தைகள் தாய்ப்பாலின்றி, சத்தாகாரமற்று, கடும் வயிற்றுப்போக்கினால் இறக்கும் நிலையிலிருந்தன. அவர்களுக்காகச் சாதிப்பாகுபாட்டை எந்நிலையிலும் கடவுள் விரும்புவதில்லை என்றும் அது இச்சமூகத்தை மூடியிருக்கும் அறியாமையாகிய காரிருள் என்றும் போதித்து மெய்யறிவை மக்களுக்கு எடுத்துக் கூறி அறிவுப் புகட்டினார்.

அக்குழந்தைகளுக்காக ஏமிக்கார்மைக்கேல் ஒவ்வொரு வீட்டின் முன்பும் கண்ணீரோடு கைக்கூப்பி மன்றாடி நிற்கும் காட்சியை இன்றுவரை அவ்வூர் மக்கள் நினைவுகூர்ந்து கூறுகிறார்கள்.

நமது இந்தியச் சமுதாயத்தில் புரையோடிக் கிடந்த அறியாமைகளான மூட நம்பிக்கைகளை அறிவியல் பூர்வமாக நீக்கியதில் கிறித்தவ மிஷனெரிகளின் பங்கே முதன்மையானது. கல்வி, அறிவியல், பொருளாதாரம் என்று அனைத்துத் துறைகளிலும் மாபெரும் வளர்ச்சியைக் கண்ட இன்றைய மனிதச் சமூகத்திற்கே கொரோனா தொற்றிலிருந்து விடுபடவும், விலகி வாழவும், தேவையான முன்னெச்சரிக்கை வழிமுறைகளைக் கடைபிடிக்க மருத்துவத் துறை பெருமளவில் சிரத்தையெடுக்க வேண்டிய கட்டாயச் சூழலில் இருக்கும் போது... 18 ஆம் நூற்றாண்டில் கல்வியறிவற்ற மற்றும் முழுமையான மூடநம்பிக்கைகளில் மூழ்கிக் கிடந்த நம் முன்னோர்களை கொள்ளை நோயின் அகோரப் பிடியிலிருந்து தப்புவிக்க எவ்வித ஊடகங்களின் வசதிகளும் இல்லாத நிலையில், கிறித்தவ மிஷனெரிகள் செய்த அறிவுப் போர் எத்தனை அளப்பரியது....!! ?

அவர்களது மீப்பெருந்தொண்டு உலக வரலாற்றின் பக்கங்களில் தெளிவின்றி நசிந்து போய்விடாதபடி பாதுகாக்க வேண்டியது இத்தலைமுறையினர் ஒவ்வொருவரின் கடமையுமாகும்.

**Dr.ஜான்சி பால்ராஜ்**

தமிழ் நாட்டின் தனிப்பெரும் நாவலாசிரியர்

## அ மாதவையா அவர்களின்

# கிளாரிந்தா

தமிழ்நாட்டில் வெளிவந்த முதல் வரலாற்று நாவல்

(வரலாற்று நெடுந்தொடர்–8)

'பாயி! இவ்வளவு சீக்கிரமே விழித்துக்கொண்டாயா?' என்று வாஞ்சையுடன் வினவினார் சந்நியாசி.

அவள் வெங்கோபாவைப் பார்த்துக்கொண்டே 'யாரோ கதவைத் தட்டியது கேட்டதால் என்னவென்று பார்க்க வந்தேன்' என்றாள். 'சொல்லு, வெங்கோபா' என்றார் சந்நியாசி.

போர் வீரன் தொடர்ந்தான்: 'நள்ளிரவில் துருப்புகள் துளையை நோக்கி ஜாக்கிரதையாய் வருவதை நமது ஒற்றர்கள் கவனித்தார்கள். நாங்கள் எதிரிகள் தான் வருகிறார்கள் என்று நினைத்துச் சுடுவதற்குத் தயாரானோம். அதற்குள் இன்னொரு ஒற்றன் குதிரையில் ஓடி வந்து அவை திருச்சிராப்பள்ளியிலிருந்து வரும் படைகள் என்று தெரிவித்தான். ஆங்கிலச் சிப்பாய்ப்படையும், பீரங்கியாளர்களும், சில நூறு கள்ளர் கொரில்லாக்களும் வந்து சேர்ந்தார்கள். அரவமில்லாமல் அவர்களைக் கோட்டைக்குள் சேர்த்துக் கொண்டோம். அவர்களோடு ஓர் ஆங்கிலேய அதிகாரியும் வந்தார். நல்ல திறமை வாய்ந்த இளைஞர். அவர் தான் அவர்களைக் கொண்டு வந்து சேர்த்தார். எதிரிகள் சும்மா இருப்பதன் காரணம் என்ன வென்றும் அந்த அதிகாரி சொன்னார். அவர்களிடம் மருந்து தீர்ந்து விட்டதாம். உணவும்-அரை வயிறு என்று வைத்துக் கொண்டாலும் கூட-இன்னும் ஒரு வாரத்துக்குக் கூடப் போதாதாம், முகாமில் அவர்களுக்குள்ளே பிளவு உண்டாகியிருக்கிறதாம். படைத்தலைவர் துளையைத் தொடர்ந்து பிடியில் வைத்திருப்பது இயலாத காரியம் என்று கருதுகிறாராம். அதிகாரிகளோ உடனே தாக்கவேண்டும் என்று சொல்லுகிறார்களாம்.

நேற்று முழுவதும் இதைத் தான் தங்களுக்குள் விவாதித்துக் கொண்டிருந்திருக்கிறார்கள். அதனால் தான் அந்த அமைதி. சென்னையிலிருந்து கப்பல் படை காரைக்காலைத் தாக்கப்போகிறது என்ற செய்தி நேற்று மாலை அவர்களுக்குக் கிடைத்து விட்டது. உடனே படைத்தலைவர் முற்றுகையை நிறுத்தி விட்டு காரைக்காலுக்குத் திரும்புமாறு தீர்மானித்து விட்டார். நமக்கு உதவிக்கு மேலும் துருப்புகள் வந்துகொண்டிருக்கின்றன என்று நேற்று இரவு கேள்விப்பட்டிருக்கிறார். அவ்வளவு தான், பின் வாங்கும்படி இன்று காலை உத்திரவிட்டுவிட்டார். இந்தச் செய்திகளை எல்லாம் கொண்டு வந்த ஆங்கில அதிகாரி உடனே ஒரு குதிரைப்படைப் பாய்ச்சல் ஏற்பாடு செய்யுமாறு தூண்டினார். எதிரியின் படைக்கு முடிந்த அளவு சேதம் விளைவித்து அவர்களை விரைவாகப் பின்வாங்கச் செய்யலாம் என்று அவர் கருதினார். ஆனால் நமது சேனாபதி சூடுகண்ட பூனையல்லவா, அதற்கு உடன்படவில்லை.'

'படைத்தலைவரைப் பற்றி இப்படியா பேசுவது வெங்கோபா? உன்னையே மறந்துவிடுகிறாயே' என்றார் சந்நியாசி கண்டிப்பான குரலில்.

மங்கோஜிக்கு விரோதமாக எது சொன்னாலும் சந்நியாசியிடம் எடுபடும் என்பது வெங்கோபாவுக்குத் தெரியும். ஆனால் தன்னைப் போன்ற இளம் அதிகாரி கட்டுப்பாட்டை அலட்சியம் செய்வது போல் பேசும் பேச்சுக்களை அவர் அனுமதிக்கமாட்டார் என்று இன்று தெரிந்து கொண்டான். 'மன்னிக்க வேண்டும், சுவாமி. நான் சேனாபதியை அவமதிக்க எண்ணவில்லை. அறிவில்லாமல் என் நாவு பேசி விட்டது' என்றான் பணிவான குரலில்

'நா காவாதவன் பாடு தொல்லையில் முடியும் என்ற மூதுரை உனக்குத் தெரியாதா? சரி, சொல்லு' என்றார் சந்நியாசி.

'எதிரிக்குத் தொல்லை கொடுக்கக் குதிரைப்படைப் பாய்ச்சலை நடத்திச் செல்ல சேனாபதி மறுத்து விட்டதும், அந்த ஆங்கில அதிகாரி தானே ஒன்றை நடத்திச் செல்வதாகச் சொன்னார். அப்பொழுது தான் திருச்சிராப்பள்ளியிலிருந்து வந்திருந்த போதிலும், அவர் சளைக்கவில்லை. சேனாபதியிடம் வற்புறுத்திப் பேசி அனுமதியும் வாங்கி விட்டார்.'

பெரும்பாலும் தொண்டர்கள் கொண்ட குதிரைப்படை ஒன்றைக் கூட்டி அதிகாலை நான்கு மணிக்கு எதிரியைத் துரத்த எங்களை அழைத்துச் சென்றார்.'

'நீயும் படையில் இருந்தாயா?'

'ஆம், சுவாமிகளே. முதலாவது அரவமில்லாமல் ரகசியமாகத்தான் முன்னேறிச் சென்றோம். அவர்கள் பாளையத்தை நெருங்கியதும் அவர்கள் மூட்டை முடிச்சுக்களைக் கட்டிக் கொண்டிருப்பதைக் கண்டோம். உடனே இரைச்சலிட்டுக் கூவிக்கொண்டு ஒரே பாய்ச்சலாக அவர்கள் நடுவில் பாய்ந்து விட்டோம். ஆங்கில அதிகாரி தான் தீவிரமாகப் பாய்ந்தார். எனக்கும் குதிரைச் சவாரி தெரியும். நமது குதிரை வீரர்களில் நான் சிறந்தவன் என்று சொல்லிக்கொள்வார்கள். பரிசுகள் கூடத் தட்டியிருக்கிறேன். ஆனால் அந்த ஆங்கிலேயர் பாய்ந்தாரே பார்க்க வேண்டும். குதிரைச் சவாரி இப்படியும் செய்யமுடியும் என்று நான் கனவில் கூட நினைத்ததில்லை. அவர் எங்கள் எல்லாரையும் விட மிக வேகமாகப் போய்விட்டார். அவரைத் தடுத்து நிறுத்தக்கூடிய சக்தி எதுவுமே

இல்லை என்று தோன்றியது. பிரெஞ்சுப் படைத் தலைவரை ஒரே அடியில் கீழே தள்ளினார். ஆனால் பிரெஞ்சு அதிகாரிகள் தங்கள் தலைவரைத் தூக்கிக்கொண்டு போய்விட்டார்கள்.

'அவர் இன்னும் மயக்க நிலையில் தான் இருக்கிறாராம். அவர் இறந்து விட்டதாகக் கூட சிலர் சொல்லுகிறார்கள். ஆனால் சிறிது நேரத்தில் எதிரிகள் திரண்டு விட்டார்கள். எங்கள் எண்ணிக்கை குறைவாக இருந்ததால் நாங்கள் திரும்ப வேண்டியதாயிற்று. சேனாபதி மாத்திரம் இன்னும் சற்றுப் பெரிய படையை அனுப்பவோ அல்லது தாமே நடத்தவோ சம்மதித்திருந்தால் எதிரியை அறவே ஒழிக்க முடியாவிடினும் நல்ல. சேதமாவது விளைத்திருப்போம். நாங்கள் திரும்பியபோது. மகாராஜா துளையில் நின்றுகொண்டிருந்தார். சுவாமிகளுக்குச் செய்தியைத் தெரிவிக்கும்படி எனக்குக் கட்டளையிட்டார்.'

'மகாதேவனைப் போற்றுவோம்' என்றார் சந்நியாசி உணர்ச்சியுடன்.

அந்த அதிசய ஆங்கில வீரர் யார், அவர் பெயர் என்ன வென்று தெரியுமா உனக்கு?'

'அவர் நேற்று இரவுதான் திருச்சிராப்பள்ளியிலிருந்து வந்தார். ஆனால் இதற்கு முன்னும் அவர் இங்கு வந்திருப்பதாகச் சொல்லுகிறார்கள். பெயர் 'டன்' என்று முடியும் ஆமாம், கிட்டில்டன், இல்லை கெட்டில்டன்- இல்லை, இல்லை, அந்த மாதிரி ஏதோ ஒன்று. மறந்துவிட்டது, சுவாமி.' **'லிட்டில்டனா?'** என்று கேட்டார் சந்நியாசி.. 'அதுவே தான் சுவாமிகளே, லிட்டில்டனே தான். சுவாமிகளுக்குத் தெரியாதது இல்லை.'

'சரி, வெங்கோபா. எல்லாம் இப்படி இனிதாக முடிந்து விட்டது பற்றி எனக்கு மிகுந்த மகிழ்ச்சி. நான் இப்படிச் சொன்னதாக மகாராஜாவிடமும் சொல்லிவிடு. நான் அந்த ஆங்கில அதிகாரியைப் பார்க்க விரும்புவதாகவும் சொல்லு – இல்லை வேண்டாம். நான் கொடுக்கும் சீட்டை அமாத்யாவிடம் கொடுத்துவிடு' என்று சொல்லி ஒரு தாளில் ஒரு சில வார்த்தைகள் எழுதி அவனிடம் கொடுத்தார். வெங்கோபா தாழ்ந்து வணங்கி இருகைகளாலும் அதைப் பெற்றுக்கொண்டான். பின் நெடுசாங்கிடையாய்க் கும்பிட்டு விட்டு வெளியே சென்றான்.

அங்கே அவன் குதிரைக் குட்டியைக் காணவில்லை. முசுடு ஹவில்தார்தான் அவிழ்த்து விட்டிருக்க வேண்டும். அவரைப் பழிவாங்காமல் விடக்கூடாது என்று நினைத்துக்கொண்டே நடந்து சென்றான்.

## சோதிடம்

ஆகஸ்டு மாதம் 11ம் தேதி மாலை. முற்றுகையினின்று விடுதலையான தஞ்சை இன்னமும் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கியிருந்தது. சந்நியாசி தமது வீட்டின் மாடியில் தமது பேத்தியின் ஜாதகத்தோடு வேறு பல வரன்களின் ஜாதகங்களையும் ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டிருந்தார். பிரசித்தி பெற்ற சோதிடர் திவான் ராமண்ணா பண்டிதர் தம் தம்பி அமாத்யாவுடன் அங்கு வந்திருந்தார். தரையில் ராமண்ணா பண்டிதருக்கு எதிரில் இரண்டு கட்டங்கள் வரையப் பெற்று அவரை இலைகள் வைக்கப்பட்டிருந்தன. கணக்குப் போடுவதற்குச் சோழிக் குவியலும் இருந்தது. மஞ்சள் பூசிய பல ஓலைச் சுவடிகள் பிரிந்து கிடந்தன. ஒவ்வொன்றிலும் ஒரு ஜாதகம் இருந்தது.

'இந்த ஐந்தும் சரிப்படாது' என்றார் திவான் அழுத்தமாக ஐந்து சுவடிகளைத் தரையில் போட்டவாறே.

'இவை ஏறக்குறைய சுத்தமாக இருக்கின்றன. ஆனால் பெண்ணின் ஜாதகத்தில் நாலரை பாகம் தோஷம் இருக்கிறது. ஆக இந்த ஐந்தையும் தள்ளிவிட வேண்டியது தான்..'

'உங்கள் தம்பி மகனின் ஜாதகம் எப்படி? நான் பையனை முற்றுகையின் போது ஓரிரண்டு தடவைகள் பார்த்தேன். பையனை எனக்குப் பிடித்திருக்கிறது. அவன் பேரனார், அதாவது உங்கள் தகப்பனார் மாதவ பண்டிதரும் நானும் பள்ளியில் ஒன்றாகப் படித்தோம். ஒரு தடவை அவர் கட்சிக்கும் எங்கள் கட்சிக்கும் சண்டை வந்தது. ஆற்றங்கரையில் அவர் கட்சியை நையப்புடைத்து விட்டது இன்னும் நன்றாக நினைவிருக்கிறது. அதற்குப் பரிகாரமாக என் பேத்தியை அவர் பேரனுக்குக் கொடுத்து விடலாம் என்று தோன்றுகிறது. அவன் ஜாதகம் பொருந்துகிறதா என்று பாருங்கள், அதிலும் தோஷம் இருப்பதால், பொருந்தும் என்றே எனக்குத் தோன்றுகிறது' என்றார் சந்நியாசி.



அமாத்யா தமையனின் முகத்தை ஆவலுடன் பார்த்தார். சந்நியாசியின் பேத்தி மலையூர் கிராமத்துக்குச் சொந்தக்காரி ஆவாள் என்பது அவருக்குத் தெரியும். முடிவில் அது அவள் கணவனின் சொத்தாகும். ஆனால் தமையன் தாரமிழந்தவர். அவருக்கும் அந்த அழகிய செல்வம் படைத்த இளம் பெண் மீது ஒரு கண் உண்டு என்று சந்தேகித்தார். ஆனால் சந்நியாசி அந்தப் பொருத்தத்துக்கு சம்மதிக்கவே மாட்டார் என்றும் தோன்றியது. சோதிடத்தைப் பற்றி அவருக்கு ஒன்றும்

தெரியாது. ஆனால் அதில் சற்று நம்பிக்கை என்னவோ உண்டு. ஆகவே தமையனின் பதிலுக்கு ஆர்வத்துடன் காத்திருந்தார்.

திவான் இரண்டு ஜாதகங்களையும் நெடுநேரம் வைத்துப் பார்த்தார். கணக்குகள் போட்டார். தலையைப் பலமாய் ஆட்டினார். சோதிட பாஷையில் ஏதேதோ சொன்னார். முடிவில் 'ஹூம் இதுவும் சரிப்படாது என்று தான் தோன்றுகிறது. நீங்கள் சொல்லுவது போல தோஷம் இருப்பது உண்மை தான். ஆனால் ஒன்றரைக்கும் குறைவாகவே இருக்கிறது. அதுவும் ஒன்று என்று தான் சில சோதிடர்கள் சொல்வார்கள். பிள்ளையின் ஜாதகத்தில் மூன்று நாலு (பாகங்களுக்குக்) குறையாமல் தோஷம் இல்லாவிட்டால் இந்தப் பெண்ணின் கணவன் அற்பாயுசில் இறந்து விடுவான்' என்றார்.

சிவசிவா' என்றார் சந்நியாசி தன்னையுமறியாமல்.

அவள் தோஷத்துக்குப் பொருந்துகிறாப் போல் இருக்க வேண்டும். பெண் ஜாதகங்களில் இப்படி, செவ்வாய், ராகு, சனி எல்லாருமே பாதகமாய் இருப்பது ரொம்ப அபூர்வம். இல்லா விட்டால் உலகமெல்லாம் கலியாணம் ஆகாத பெண்களாகவும் விதவைகளாகவும் நிறைந்து விடும். நானும் எத்தனையோ ஜாதகங்களைப் பார்த்திருக்கேன். இந்த மாதிரி இரண்டு மூணுக்கு மேல் பார்த்ததாக நினைவில்லை' என்றார் திவான். இதைக் கேட்டதும் அமாத்யாவின் முகம் விழுந்து விட்டது. சந்நியாசியும் ஏமாற்றமடைந்தது போலவே தோன்றினார்.

'அப்படியானால் உங்கள் பிள்ளையின் ஜாதகத்தையும் ஒதுக்கிவிட வேண்டியதுதானா?' என்று கேட்டார்.

**திவான்:** 'உங்கள் குடும்பத்தோடு சம்பந்தம் செய்து கொள்வதென்றால் நானும் தம்பியும் எவ்வளவோ பெருமைப்படுவோம். பெண்ணின் அபூர்வ அழகையும் தகுதிகளைப் பற்றியும் சொல்ல வேண்டுவதில்லை. அவளுக்கு வரக்கூடிய சீதனத்தைப் பற்றியும் நாங்கள் அறிவோம். கடவுள் பயமில்லாதவன், ஜாதகத்திலே நம்பிக்கை இல்லாதவன் என்றால் உங்களை ஏமாற்றப் பார்ப்பான். ஆனால், இந்த சாஸ்திரம் மிகவும் உன்னதமானது என்பது என் நம்பிக்கை. உண்மையை மறைக்கவோ மாற்றவோ என்னால் முடியாது. தம்பி இந்தப் பொருத்தத்துக்கு சம்மதிக்க நான் மனம் ஒப்பமாட்டேன். மற்ற எல்லா விஷயங்களும் பொருந்தித்தான் இருக்கு. ஆனால் என்ன செய்ய முடியும்? ஆனால் நீங்களும் தம்பியும் முடிவு செய்ய வேண்டிய விஷயம். நான் ஆலோசனை தான் சொல்ல முடியும்.'

**சந்நியாசி:** 'நீங்கள் இவ்வளவு திட்டமாகச் சொன்ன பிறகு செய்ய முடியுமா? அவர்கள் இரண்டு பேருடைய தீர்க்காயுசையும் சந்தோஷத்தையுமல்லவா முக்கியமாகக் கவனிக்க வேண்டும்?'

ஆமாம் அது தானே முக்கியம்?' என்று அமாத்யாவும் வருத்தத்துடன் எதிரொலித்தார்.

**சந்நியாசி:** 'இனிமேல் என்ன செய்வது என்று எனக்குத் தெரியவில்லை. பையனின் ஜாதகத்திலும் தோஷம் இருந்ததால், இந்தச் சம்பந்தத்தை எப்படியும் முடித்து விடலாம் என்றிருந்தேன். பாயிக்குப் பன்னிரண்டுதான் முடிந்திருக்கிறது. ஆனால் தாயைப்போல் வயதுக்குப் பெரியவளாகத் தோற்றமளிக்கிறாள். எனக்கு வரவரத் தள்ளாமை அதிகரிக்கிறது. இன்னும் அதிக நாள் ஓடாது. சீக்கிரமாக அவளுக்குக் கலியாணத்தை முடித்து விட்டு இறப்பதற்கு முன் காசிக்குப் போய்விட வேண்டும். வேறு ஏதாவது தகுந்த பையன்கள் அல்லது இளைஞர்கள் உங்களுக்குத் தெரியுமா?

'திவான் வலது ஆள்காட்டி விரலை உதட்டில் வைத்து யோசித்தவாறே,' 'இங்கே அப்படி யார் இருக்கிறார்கள்? மஹாராஷ்டிரம் என்றால் எளிதாகத் தேர்ந்தெடுக்கலாம், இங்கே நாம் சில பேர்தானே இருக்கிறோம்? உங்கள் அந்தஸ்தையும் கவனிக்க வேண்டியதிருக்கிறது. மராட்டிய பிராமணர் பொதுவாக ஏழைகளாகத் தானே இருக்கிறார்கள்?'

**சந்நியாசி** சொன்னார்: 'ஏழ்மையை நான் குற்றமாக நினைக்கவில்லை. செல்வமும் அந்துஸ்துமே, நற்குணத்துக்கும் கௌரவத்திற்கும் அடையாளங்கள் என்றும் நான் கருதவில்லை.'

'நான் சிறுவனாக இருந்தபோது ஏழைக்கும் ஏழையாக இருந்தேன். நேர்மையும் உறுதியும் ஊக்கமும் வாய்ந்த இளைஞர்கள் வாழ்க்கையை நன்கு அனுபவிக்க வேண்டுமென்றால் தரித்திரத்தின் பிடியில் அகப்படுவது மிகவும் அவசியமாகும். தரித்திரம் ஒருவனின் மேதையைச் சில காலம் தடுத்து மறைத்து வைக்கலாம். ஆனால் அவன் முயற்சியுடன் முன்னுக்கு வந்து விட்டானானால், அவன் உண்மையான சரக்குள்ளவன் என்பது நிரூபனமாகிவிடுகிறது. அவன் போலி அல்ல. தன் முன்னோர்களின் தகுதிகளில் சார்ந்து நிற்கும் நிழலும் அல்ல. பழம் பெருங்குடும்பத்தின் வாரிசுகள் பெரும்பாலும் உலகத்தில் பேர்பெற்று விளங்குவதில்லை. அயோக்கியத்தனத்தில் வேண்டுமானால் பேர் பெறுகிறார்கள். இளமையில் தங்க மோகராக்களை வைத்து விளையாடுகிறவன் முதுமையில் செப்புக்காசுகளைப் பிச்சை எடுக்கிறான் என்று தமிழ்க் கவிஞர் சொல்லுவது போல-அறிவாளியின் வறுமையை விட மூடனின் செல்வம் பெரும் தீமை தரும்.'

ஆகையால் சமூகம், அந்தஸ்தைப்பற்றி நான் கவலைப்படவில்லை. ஏழையானாலும் நல்ல பையன் என்று கேள்விப்பட்டிருந்தால் தயவுசெய்து சொல்லுங்கள். முதலில் நீங்கள் ஒதுக்கினீர்களே, அந்த ஐந்து ஜாதகங்களும் ஏழைப் பையன்களுடையவை தான். அதில் ஒன்று என்னோடு பள்ளியில் படித்த ஓர் ஏழைப் புரோகிதரின் பேரனுடையது. ஏதாவது ஒன்றைச் சீக்கிரத்தில் தேர்ந்தெடுத்தாக வேண்டும்..

**திவான்:** 'ஆமாம், மிக அவசரமாகச் செய்ய வேண்டிய காரியம் தான். பெண் வயதுக்கு வந்து விட்டாளென்றும் மறைத்து வைத்திருக்கிறார்கள் என்றும் வம்புப் பேச்சு நடக்கிறது' என்றார்.

**சந்நியாசி:** 'அது பொய், அது உண்மையாக இருந்தாலும் கூட அதனால் ஒன்றும் கெட்டுவிடாது. இப்பொழுது பழக்கத்தில் இருக்கும் குழந்தை மணம் பின்னால் ஏற்பட்டது தான். ஆதியில் நமது முன்னோர்கள் அப்படிச் செய்யவில்லை என்று நமது புராணங்களிலிருந்து தெரிகிறது. நாம் கலியாணச் சடங்கில் ஓதும் மந்திரங்களிலிருந்தும் அது மிகத் தெளிவாகத் தெரிகிறது.'

**திவான்:** 'ஆனால் இப்பொழுது அந்தப் பழக்கத்தை எல்லோருமே கைப்பற்றுவதால் நாமும் அதை அனுசரித்தே ஆகவேண்டும். இந்தச் சமூகத்தில் மேற்கோள் எடுத்துச் சொல்லுவது அசம்பாவிதமாக இருக்கும். ஆனால் ஒன்பது வயதுக்கு முன்னால் பெண்களுக்குக் கல்யாணஞ்செய்துவிட வேண்டும் என்று சாஸ்திரங்களில் தெளிவாகச் சொல்லியிருக்கிறது' என்றார்.

**சந்நியாசி:** 'அவசியம் இல்லை. அதற்கெதிரான மேற்கோள்கள் அனைத்தையும் நீங்கள் விரும்பினால் நான்

உங்களுக்கு எடுத்துச் சொல்ல முடியும்.’ அவருடைய பழைய பொறுமையின்மையும் எடுப்பும் அகமும் சற்றே தலை காட்டிற்று. ’எல்லா நியமங்களையும் பழக்கங்களையும் – அதிலும் அறிஞர்கள் கருத்து வேற்றுமை கொள்ளும் இதைப்போலொரு பழக்கத்தைக் குருட்டுத்தனமாகப் பின்பற்றுவது அறிவுடமை ஆகாது. அதை ஆராய்ந்து நமது அனுபவங்களாலும் பகுத்தறிவாலும் சமன் செய்து சீர்தூக்கி முடிவுக்கு வர நமக்கு உரிமை உண்டு. நமது நன்மைக்காகவும், சௌகரியங்களுக்காகவுமே சாஸ்திரங்கள் ஏற்பட்டன. நமது முன்னோர்களிடமிருந்து நாம் பெறும் மற்ற லௌகிக உடைமைகளைப் போலவே இவற்றையும் நமக்கு ஏற்றவாறு சிறந்த வகையில் பயன்படுத்திக் கொள்ளலாம். தவறான வழியில் பயன்படுத்துதல் தகாது. சுசருதரும் மற்றும் மருத்துவ அறிஞர்களும் குழந்தைத் திருமணத்தை வன்மையாக எதிர்க்கிறார்கள். இந்தப் பழக்கத்தை ஆதரிக்கும் நியதிகளும் அதைப் பாராட்டிச் சொல்லுகின்றனவே தவிர கட்டளையாகச் சொல்லவில்லை. பார்க்கப்போனால் திருமணமும் கட்டாயமில்லை. கேரள பிராமணருடைய பழக்க வழக்கங்கள் வேதங்களை யொட்டியவை. அவர்கள் தங்கள் பெண்களுக்கு வயது வந்த பின்னரே மணஞ்செய்விக்கின்றனர். சில பெண்கள் வாழ்க்கை முழுவதும் மணமாகாமலும் இருக்கின்றனர். ஆனால் இந்தச் சந்தர்ப்பத்தில் நான் அந்தப் பழக்கத்தை முறிக்க விரும்பவில்லை. அதில் சில பயன்களும் இருக்கத் தான் செய்கின்றன. உதாரணமாக, இந்தச் சூழ்நிலையில் நான் அந்தப் பழக்கத்தை அனுசரிக்காவிட்டால், அநாதைச் சிறுமியொருத்தி சமூகக் கொடுமைகளுக்கு ஆளாகி திக்கில்லாமல் நிற்க நேரிடும். அதனால் தான் நான் அவள் திருமணத்தைச் சீக்கிரம் முடித்து விட விரும்புகிறேன்.’

‘நான் ஒன்று சொல்லுகிறேன். நீங்கள் என்ன நினைத்துக் கொள்வீர்களோ’ என்று இழுத்தாற்போல் தயக்கத்துடன் கூறத் தொடங்கினார் திவான். ‘பெண்ணின் ஜாதகம் வேறு யார் ஜாதகத்தோடும் பொருந்தாததாலும், அது என் ஜாதகத்தோடு சுமாராகப் பொருந்துவதாலும் மாத்திரமே நான் இந்த யோசனையைச் சொல்லுகிறேன். என்னுடைய ஒரே மகளுக்கு ஆண் குழந்தை இல்லை. என் வம்சத் தொடர்ச்சிக்காகவும் ஆத்மா முக்தி அடையவும் நான் ஆண் மகவை விரும்புகிறேன். அடுத்த பிறந்த நாளோடு எனக்கு நாற்பத்தி ஐந்து தான் முடிகிறது. மகளுக்கு ஆண் குழந்தை பிறக்கும் என்று எதிர்பார்த்து, மனைவி இறந்ததும் மறுமணம் செய்து கொள்ளாமலே இருந்துவிட்டேன். ஆனால் அவளோ தீராத நோயாளியாகி விட்டாள். இனிமேல் எனக்குப் பேரப் பையன் பிறப்பான் என்ற நம்பிக்கைக்கு இடமில்லை. இந்த ஆண்டு தொடக்கத்தில் வல்லத்தில் உங்கள் பேத்தியைப் பார்த்ததிலிருந்தே, நான் மறுமணத்தைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கினேன். ஆனால் இதுவரை அதைப்பற்றி எதுவும் பேசத் தயங்கியிருந்தேன்.’

நான் சொல்லுவதெல்லாம் இது தான்: நீங்கள் மனமுவந்து அவளை எனக்குக் கொடுப்பீர்களானால், அவள் சந்தோஷத்துக்காக நான் எதுவும் செய்யச் சித்தமாக இருக்கிறேன்..

திவான் பேசக் கேட்டதும் சந்நியாசி முதலில் துணுக்குற்றார். ஆனால் அவர் பேசிக்கொண்டே இருந்ததால், ஆச்சரியம் தெளிய சந்நியாசிக்கு அவகாசம் கிடைத்திருந்தது. ஆகவே அவர் அமைதியாக, ‘நான் இதைப்பற்றி யோசித்ததே இல்லை. முடிவுக்கு வர அவகாசம் வேண்டும். உங்கள் ஜாதகம் பொருந்துகிறதென்று சொல்லுகிறீர்களா?’ என்று கேட்டார்.

‘ஆமாம், நன்றாகப் பொருந்துகிறது. மிக நன்றாகப் பொருந்துகிறது என்று கூடச் சொல்லலாம்’ என்று சொல்லிக்கொண்டே சட்டைப் பைக்குள்ளிருந்து ஒரு ஓலைச் சுவடியை எடுத்தார். இதில் மூன்று பாகம் தோஷம் இருப்பதைக் கவனித்தீர்களா? சிலர் அதை மூன்றரை என்று கூட எடுத்துக் கொள்ளுவார்கள். முதல் மனைவி அகாலமாக மரணமடைந்தது, எங்கள் ஜாதகங்களைத் திருமணத்துக்கு முன் சரியாக ஆராயாதது தான். ஆக, உங்கள் பேத்தியின் ஜாதகத்தோடு இது நன்றாகப் பொருந்துகிறது’ என்று முடித்தார்.

‘சரி, நான் யோசனைபண்ணி உங்களிடம் முடிவு சொல்லுகிறேன். இதுவரை இதை யோசித்ததேயில்லை. பெண்ணையும் கலந்துகொள்ளவேண்டும்’ என்று சந்நியாசி பதில் சொன்னார்.

‘பெண்ணைக் கலந்து கொள்வதா?’ என்றார் திவான். அவரால் ஆச்சரியத்தை மறைக்க முடியவில்லை. ’அப்படி யார் செய்வார்கள்? அவள் குழந்தைதானே. இந்த விஷயங்களைப் பற்றியெல்லாம் அவளுக்கு என்ன தெரியும். இந்த ஒரு தலைமுறையாக நமது ராச்சியத்தில், சுவாமிஜியை ஞானமே வடிவானவர் என்று போற்றி எல்லாவற்றுக்கும் உங்கள் ஆலோசனையைக் கேட்கிறோம். நீங்களோவென்றால் இந்தத் திருமண விஷயமாய்ப் பேரக்குழந்தையைக் கலந்துகொள்ள வேணும் என்கிறீர்கள். வேடிக்கைதான்’ என்றார் திவான்.

சந்நியாசியின் உதடுகளில் ஒரு சிறு--மிகச் சிறு--புன்னகை நெளிந்தது. ‘ராமண்ணா, நீங்கள் இப்பொழுது தான் பாயி வயதுக்கு வந்து விட்டதாக வதந்தி உலவுகிறது என்றீர்கள். ஆனால் அவள் குழந்தைதானே என்றும் அவள் சொந்த வாழ்க்கைப் பிரச்சினையைப் பற்றிப் பேசுவதற்குக்கூட அவளுக்கு உரிமை இல்லை என்றும் சொல்லுகிறீர்கள். சரி, அது இருந்து விட்டுப்போகட்டும். ஜாதகம் நிச்சயமாகப் பொருந்துகிறதா?’ என்று கேட்டார்.

‘ஆமாம், அதனால் தான் நான் இந்தப் பேச்சையே எடுத்தேன்’ என்றார் திவான் கூச்சமில்லாமல். திவ்வியமாகப் பொருந்துகிறது. மூன்றரைக்கு நாலு, செவ்வாய் தோஷத்துக்குக் களத்திரதோஷம், ஒன்றை ஒன்று அழித்து விடுகிறது. இரண்டு தரப்பிலும் ஆபத்தில்லை.

‘சரி, நான் யோசித்து முடிவு சொல்லுகிறேன்’ என்று சந்நியாசி சுவடிகளைச் சேர்த்தார். சகோதரர்களும் விடை பெற்றுக்கொண்டு போய்விட்டார்கள். தனியாக இருந்த சந்நியாசி சிந்தனையில் மூழ்கினார். எந்த முடிவுக்கும் வர முடியாமல் நொந்து தவித்தார். அவருக்கும் சோதிடம் தெரியும். ஆதலால் தாம் கொண்டு வந்திருந்த ஜாதகங்களின் பொருத்த மின்மையை திவான் எடுத்துச் சொன்னதை அவர் ஒத்துக் கொண்டார்.

அவருக்கு அமாத்யாவை அறவே பிடிக்காவிட்டாலும், அவர் மகன் நல்லவன் என்று தோன்றியது.

**தொடரும் ...**

# “தேவதாசி முறையை ஒழித்த தேவதை”

தேவ அழைப்பை ஏற்று நம் நாட்டுக்கு வந்த மேலைநாட்டு மிஷனெரிகள் சுவிஷேசத்தை அறிவிக்க வந்தனர். சுவிஷேசத்தை மட்டும் அறிவிக்காமல் அதற்கு மேலாக சமுதாய தொண்டும் செய்தனர். அவர்கள் சந்தித்த சமுதாயமும் அதின் கலாச்சாரமும் முற்றிலும் வேறுபட்டதாகவே இருந்தது. ஒவ்வொரு பகுதியிலும் வெவ்வேறு சமுதாய மாற்றங்களை மேற்கொண்டனர். ஆண் ஆதிக்க சமுதாயமாக இருந்த அக்காலத்தில் பெண்களை ஒடுக்குதல் மற்றும் சீர்கேடுகள் எங்கும் பரவி இருந்தது. கலாச்சாரத்தின் கோரபிடியில் இருந்த பெண்களுடைய உரிமையை மீட்பதற்காக சில பெண் மிஷனெரிகளும் சேர்ந்து போராடினர். அவற்றுள் நம் சமுதாயத்தை சீரழித்து கொண்டு இருந்த **‘தேவதாசி’** முறையை எதிர்த்து ஏமி கார்மைக்கேல் அம்மையார் பெரிதும் போராடி அநேக குழந்தைகளை மீட்டெடுத்தார்.

### இளமைக்காலம்:

ஏமி கார்மைக்கேல் அவர்கள் இங்கிலாந்து தேசத்தில் உள்ள அயர்லாந்தில் ஒரு சிறிய கிராமத்தில் டேவிட் கார்மைக்கேல் மற்றும் கேத்ரின் இணையாருக்கு கடைசி மகளாக பிறந்தார். கார்மைக்கேல் குடும்பத்தார் மிகவும் கடவுள் பக்தி மிகுந்தவர்களாக விளங்கினர். அவளது பெற்றோர் அன்று அறியவில்லை தன் மகள் ஆயிரத்துக்கும் மேற்பட்ட பெண்களை மீட்டு மறுவாழ்வு கொடுக்கப்போகிறாள் என்று. ஏமி தன் 5வது வயதில் தந்தையை இழந்தாள். ஏமி கார்மைக்கேல் தன்னுடைய குடும்பத்தாரால் நிறுவப்பட்ட சபையில் கொஞ்ச காலம் பணி புரிந்தார். சபையில் ஊழியம் செய்த காலத்திலேயே, அங்கு தொழிற்சாலையில் பணிபுரிந்த பெண்களின் முன்னேற்றத்திற்காக பெரிதும் உதவி செய்தாள்.

### ஊழிய அழைப்பு:

ஏமி தன்னுடைய ஊழிய அழைப்பில் மிகவும் கவனமாக இருந்தார். தனக்கான நேரம் வரும் வரை சரியாக காத்திருந்தார். அதுவரை ஏமி, கார்மைக்கேல் குடும்பத்தாரால் நிறுவப்பட்ட ஆலயத்திலேயே பணிபுரிந்தார். ஒரு நாள் ஹட்சன் டெய்லர் அவர்கள் நிறுவிய சீன உள் நாட்டு மிஷனெரி பணியை குறித்து அறிந்து, தன்னை முழு மனதோடுகூட மிஷனெரிப் பணிக்கு அர்ப்பணித்தார் ஏமி. அந்த நிறுவனத்திற்கு விண்ணப்பித்த ஏமி, லண்டனில் உள்ள பயிற்சி நிறுவனத்தில் பயிற்சி பெறத்தொடங்கினார். அங்கு அவர் சீன தேசத்துக்கு மிஷனெரியாக சென்ற மேரி கின்னஸ்ஸை சந்த்திக்கும் வாய்ப்பு பெற்றார். மேரி கின்னஸ் அவர்கள் கூறிய அறிவுறையை ஏற்றுக்கொண்டு ஆசியா கண்டத்திற்கு பயணத்தைத் தொடங்க முடிவு செய்தார் ஏமி.

### இந்திய தேசத்தில் ஏமியின் ஊழியம்:

ஆசிய கண்டத்தில் ஏமி கார்மைக்கேல் அம்மையார் ஜப்பான் தேசத்தில் சிறிது காலம் ஊழியத்தை நிறைவேற்றினார். ஏமி அவர்களுக்கிருந்த நரம்பு சம்பந்தப்பட்ட வியாதி அதிகமானதால் அங்கு தன் சுவிஷேசப்பணியைத் தொடர முடியவில்லை. ஜப்பானைத் தொடர்ந்து இலங்கை தேசம் சென்றார். அதன் பிறகு பெங்களூர் வந்து தன் ஊழியத்தை தொடர்ந்தார். சிறிது கால ஊழியத்திற்கு பின்பு ஒரு நீண்ட இடைவேளையை நோய் நிமித்தமாக தன்னுடைய வாழ்வில் சந்தித்தார். வியாதி சற்று சரியாகவே சிறிது நாட்கள் கழித்து திருநெல்வேலி திருச்சபைக்கு சுவிஷேசம் அறிவிக்க நியமிக்கப்பட்டார். இதுவே கார்மைக்கேல் அம்மையாரின் வரலாற்று வாழ்க்கைக்கு அடித்தளமிட்டது.

### தேவதாசி முறை:

இந்திய தேசத்தில் குறிப்பாக தென் தமிழகத்தில் ஏமி அவர்கள் பணி செய்த காலத்தில் மூடநம்பிக்கையின் காரணமாக, அநேக சீர்கேடுகள் சமுதாயத்தில் நிறைந்திருந்தது. மக்கள் தங்களுக்கு வாழ்வு வேண்டுமென்று மூடநம்பிக்கைகளைப் பின்பற்றி வந்தனர். அவற்றுள் மிகவும் கொடுமையானது **‘தேவதாசி முறை அல்லது பொட்டுக் கட்டுதல்”** என்பர். பெண் பிள்ளைகளை கடவுளுக்கு திருமணம்செய்துவைக்கும்முறைஆகும். அப்படிஅர்ப்பணிக்கப்படும் பெண்கள் கோயிலில் தங்க வைக்கப்படுவார்கள். அந்தப் பிள்ளைகள் அங்கு உள்ள பிராமணப் பூசாரிகளால் சீரழிக்கப்பட்டு மிகவும் துன்புறுத்தப்படுவர். தேவதாசிகளாகவிடப்படும் பெண் பிள்ளைகள் பாலியல் ரீதியாகவே பயன்படுத்தப்பட்டனர். அங்கு வரும் பொது மனிதர்களால் மிகவும் துயரத்தை அடைந்து தங்கள் நிலையை இழந்தவர்களாக இருந்தனர். இதனை இந்த தீய சமுகம் பெரிதும் வரவேற்று, இறைவனுக்கு செய்யும் தொண்டாகவே கருதி வந்தது.

### ஏமி கார்மைக்கேல் அம்மையாரும் - தேவதாசி முறையும்:

ஏமி கார்மைக்கேல் அம்மையார் திருநெல்வேலி பகுதியில் சுவிஷேச பணியை அறிவிக்க தொடங்கிய போது மக்கள் பெரிதும் மூட நம்பிக்கைக்குள் சிக்கி இருப்பதை அறிந்து அவர்களை விடுவிக்க முயற்சிகளை எடுத்து வந்தார். தேவதாசியாக போகும் பிள்ளைகளின் பெற்றோருக்கு கோயில் நிர்வாகம் நல்ல பண உதவிகளை செய்து வந்ததால் அவர்களை விடுவிக்க கார்மைக்கேல் அம்மையாருக்கு சற்றுக் கடினமாகவே இருந்தது. பெண்களின்



**அன்பில்லாமல் கொடுக்கலாம் ஆனால் கொடுக்காமல் நேசிக்க முடியாது**

முன்னேற்றத்திற்கு உதவவேண்டும் என்ற எண்ணம் அம்மையாருக்குள் பற்றி எரிந்துகொண்டே இருந்தது. அதன் விளைவாக அம்மையார் அங்கு வாழ்ந்த பகுதி மக்களிடம் அதிக அன்பு செலுத்தினார்கள். இந்த அன்பு மக்களை மிகவும் மாற்றியது. மக்கள் அவர்களின் குறைகளை கூறி ஆறுதல் பெற்றுக்கொண்டார்கள். அவ்வப்போது மக்களுக்கு ஏற்படும் கஷ்டங்களில் அவர்களுக்கு ஏற்ற உதவிகளையும் செய்தார்கள். இதினிமித்தம் மக்களின் மனம் பெரிதும் ஏமி அவர்களை நேசிக்க ஆரம்பித்தது. அந்நாட்களில் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள பெருங்குளம் என்ற கிராமத்தில் ஒரு கோவிலில் இருந்து, அக்கோவிலுக்கு நேர்ச்சையாக கொடுக்கப்பட்ட தேவதாசியான லட்சுமி (பரீனா) கோவிலிருந்து தப்பி அம்மையாரிடம் தஞ்சம் புகுந்தாள். அந்தச் சிறு பெண் மூலமாக தேவதாசி முறையின் கொடுமையை முழுவதுமாக அறிந்த அம்மையார், சிறு பெண்கள் மற்றும் பெண் குழந்தைகள் படும் துன்பத்தை அறிந்து அவர்களை மீட்டு மறுவாழ்வு அளிக்க வேண்டும் என்ற லட்சியம் கொண்டார் அம்மையார்.

அம்மையார் அவர்கள் தமது பேச்சாலும், போதனையினாலும், எழுத்தினாலும், மக்களிடம் இந்த மூடப்பழக்கவழக்கத்தை எடுத்துக்கூறி விழிப்புணர்வை ஏற்படுத்தினார். கல்வி நிலையங்கள் மற்றும் காப்பகங்கள் அமைத்து பராமரித்து வந்தார்.

**டோனாவூர் காப்பகம்:**

தேவதாசி முறையை ஒழிப்பதற்கு ஏமி கார்மைக்கேல் அம்மையார் பெரும் முயற்சியை மேற்கொண்டார். அதின் பெரும் பங்காக அமைந்ததே டோனாவூர் காப்பகம். முதலில் இந்த கிராம மிஷனெரிகள் ஓய்வு எடுக்கும் இல்லங்களாக இருந்தது. ஆனால் அம்மையாரோ அதை காப்பகமாக மாற்றினார். தேவதாசி பெண்களை மீட்டு இங்கு அடைக்கலம் கொடுத்தும் கல்வி அறிவை கொடுத்து அவர்களை நன்கு பராமரித்து, அவர்களின் வாழ்வாதாரத்தை உயர்த்தினார். ஏமி அவர்களின் ஊழியத்தின் பலனாக பலர் தேவதாசிகளாக தங்களது குழந்தைகளை அனுப்பும் முறையை நிறுத்தினர். 1918ம் ஆண்டு டோனாவூர் காப்பகம் ஆண்களுக்காகவும் செயல்படத் தொடங்கினது. இன்று அநேக மக்களுக்கு உதவும் வகையில் கல்வி, மருத்துவம் போன்ற வசதிகளும் உள்ளது.

ஏமி கார்மைக்கேல் அம்மையார் எடுத்த ஒரு சிறிய முயற்சி சமுதாயத்தையும் அதின் அமைப்பையும் மாற்றியது. பெண்களுக்கான விடுதலையயும் பெற்றுக் கொடுத்தனர். இதன் காரணமாகவே அனைத்துப் பிள்ளைகளும் **'அம்மா'** என்று அன்புடன் அழைத்தனர். நாமும் இன்று இந்த சமுகத்தில் அநேக மூடப்பழக்கவழக்கங்களைக் கடந்து வருகிறோம். அவற்றில் இருந்து இந்த மக்களை விடுவிக்க நாம் என்ன செய்யப்போகிறோம் என்பதை சிந்திப்போம், செயல்படுவோம்.

**பெண்ணெட் ஜோஸ்வா**
**தூத்துக்குடி**



# மெய்யறிவு பெற செய்த ‘மிஷனெரிகள்’



ஏமாறுகிறவர்கள் இருக்கும்வரை ஏமாற்றுகிறவர்கள் இருக்கத்தான் செய்வார்கள் என்பது உலகறிந்த உண்மை. கல்வியறிவினை மிஷனெரிகள் கொடுக்கும் முன்னதாக பல ஏமாற்றுகாரார்கள், மக்களின் மூடத்தனத்தை மூலதனமாக்கிக் கொண்டு அவர்கள் மூலமாக சுகபோக வாழ்வினை சிலர் வாழ்ந்து கொண்டிருந்தார்கள். பயத்தின் காரணமாக சிலர், பக்தியின் காரணமாக சிலர் என பல வித மூடப்பழக்கங்கள் மேகமென மக்களை சூழ்ந்திருந்தது. அக்காலத்தில் மிஷனெரிகளும், உபதேசியார்களும் மூடப்பழக்க வழக்கத்திற்கு அடிமைப்பட்டு கிடந்தவர்களை எப்படி மீட்டெடுத்தார்கள் என்பதை கனம் கிறிஸ்துதாஸ் ஐயரவர்கள் 1976ம் ஆண்டில் தாம் எழுதின **‘மறையவிருந்த மாணிக்க கற்கள்’** என்ற புத்தகத்தில் சிலவற்றை எழுதியிருக்கிறார்கள். அப்புத்தகத்திலிருந்து முதல் இரண்டு சம்பவங்களாக இங்கு பதிவிடுகிறேன்.

### கடையனோடை தீச்சட்டி சம்பவம்

1864ம் ஆண்டிலே ஒரு நாள் காவி உடை அணிந்து, நெற்றியிலும், உடலிலும் திருநீர் பூசிக்கொண்டு, கைகளில் எரிகின்ற தீச்சட்டி ஒன்றினை பிடித்துக் கொண்டு ஒரு மனிதன் ஊருக்குள் வந்தான். ஊருக்குள் மேளதாள வாத்தியங்களுடன் வந்து மக்களை மிரட்ட ஆரம்பித்தான். அவனோடு வந்த ஒருவன் **‘வீர வசந்தராயர் வருகின்றார், தாழ்ந்த சாதிக்காரார்கள் எல்லாம் ஒதுங்கிப் போங்கள், அவர் வந்து கிறிஸ்தவர்களையெல்லாம் அழிப்பார், அவர்களுடைய தேவாலயங்கள் எல்லாம் தரைமட்டமாக்குவார்’** என்று முழுங்க ஆரம்பித்தான். இதைக் கேட்ட மக்கள் யாவருக்கும் பயம் மேலிட்டது. ஒவ்வொரு வீட்டின் முன் நின்று பணம் கேட்டான், அனைவரும் அவனது சாபத்திற்கு பயந்து காணிக்கை கொடுக்க ஆரம்பித்தார்கள். அவன் கையில் வைத்திருந்த தீச்சட்டி எரிந்துக் கொண்டிருந்தும் அவனுக்கு தீங்கு ஒன்றும் ஏற்படவில்லையென்று என்பதை அறிந்து அவனுக்குள் ஏதோ தெய்வீக சக்தி இருக்கின்றது என்று எண்ணி பயந்தார்கள். பயத்தினால் கிறிஸ்தவர்கள் அவனுக்கு காணிக்கைக் கொடுத்தார்கள்.

எல்லாவற்றையும் மக்கள் கூட்டமாக பார்த்துக் கொண்டிருந்தனர், அப்பொழுது கடையனோடை சபை ஊழியரும் அங்கு வந்து சேர்ந்தார். அந்த கூட்டத்தில் இருந்த வாலிபன் ஒருவன், அந்த மனிதன் வைத்திருந்த தீச்சட்டியை அவர் சற்றும் எதிர்பாராத நேரத்தில் அவன் கையிலிருந்து எடுத்து தன் கையில் வைத்துக் கொண்டான். வாலிபன் தீச்சட்டியை கையில் வைத்தும் கை சுடவில்லை என்று மக்களுக்கு கூறினான். அதனை எதிர்பாராத வீர வசந்தயார் **‘தீச்சட்டியை ஏதும் செய்துவிடாதே செய்தால் இரத்தம் கக்கி சாவாய்’** என்று மிரட்டினார். இதனைப் பார்த்துக் கொண்டிருந்த சபை ஊழியர் வாலிபனின் கையிலிருந்த தீச்சட்டியை எடுத்து அதை தலை கீழாக கவிழ்த்தினார். நெருப்புக்கு கீழ் களிமண் களி நல்ல ஈரத்தோடு கூட சட்டிக்குள் இருந்ததைக் கண்டு பிடித்தனர். செய்வதறியாது திகைக்க அந்த வீர வசந்தராயர் திருதிருவென விழிக்க, மக்கள் யாவரும் தாங்கள் கொடுத்த காசை கேட்க ஆரம்பித்தார்கள். அவ்வளவு தான் குதிகால் பிடறியில் தெறிக்க ஒடின வீரவசந்தராயர் அதன் பின்பு கடையனோடை பக்கம் வரவேயில்லை .

### கிறிஸ்தியாநகரம் ஆலமர சாமி

இது 1886 முதல் 1898ம் வருடத்திற்குள்ளாக நடந்த சம்பவமாக இருக்க வேண்டும். ஏனென்றால் அருள்திரு எலியேசர் ஐயரவர்களின் காலத்தில் நடந்த சம்பவம் என கனம் கிறிஸ்துதாஸ் ஐயரவர்கள் எழுதின்றார். கனம் எலியேசர் ஐயரவர்கள் 1853ம் ஆண்டு இடையன்குடியில் பிறந்தவர். 1886 கனம் கால்டுவெல் பேராயரிடத்தில் உதவி குருப்பட்டம் பெற்று, கிறிஸ்தியாநகரத்திற்கு ஊழியம் செய்யும் படியாக அனுப்பப்பட்டார். கிறிஸ்தியாநகரத்திற்கு அவர் வந்த பொழுது 33 வயதுடையவராக வந்து சேர்ந்தார்.

கிறிஸ்தியாநகரத்தின் ஊர் எல்லைக்குள்ளாக பிரவேசிக்கும் முன்னர் செழிப்பாய் வளர்ந்த ஆலமரம் ஒன்று இருந்தது. ஒரு சிலர் அந்த மரத்தில் சாமி இருக்கிறது என்று சொல்லி, ஒரு பீடத்தை அமைத்து கருப்பசாமி என்று பெயர் வைத்து அதனை வழிபட ஆரம்பித்தனர். கிறிஸ்தியாநகர மக்களுக்கும் உடன்குடியில் வசித்த இந்து மக்களுக்கும் அந்த மரத்தைப் பார்த்தால் அப்படி ஒரு பயம் உண்டு. மரத்தின் கிளை கீழே உடைந்துக் கிடந்தாலும் கூட மக்கள் அதனை தொடமாட்டார்கள். விறகிற்கு தங்கள் இல்லத்திற்கு எடுத்தும் வர மாட்டார்கள். அப்படி எதாகிலும் எடுத்து வந்தால், அந்த சாமி பாம்பை அனுப்பி தங்களை தீண்டிவிடும் அல்லது அதுவே நேராக வந்து பழி வாங்கிவிடும் என்கிற பயம் உண்டு. ஒரு நாளில் கிறிஸ்தியாநகரத்தை சேர்ந்த ஒரு வாலிப பெண் ஒருத்தி காய்ந்து உடைந்து போன ஒரு மரக்கிளையை தங்கள் வீட்டிற்கு எடுத்து வந்து விட்டாள். இதனைக் கண்டதும் அவளது தாயார் பதறிப் போனாள். சாமி தண்டிக்கும் முன்னதாகவே அவள் தன் மகளை நன்கு தண்டித்துவிட்டு, மிகுந்த பயபக்தியோடு கூட அந்த கிளையை சாமி கோயிலில் வைத்துவிட்டு வந்தாள்.

ஒரு நாளிலே அந்த மரம் தானாகவே பட்டுபோக

ஆரம்பித்தது. இதனைக் கண்ட பஞ்சாயத்து போர்டு நிர்வாகம் இதனை வெட்டி எடுப்பதற்கு ஏலம் கூறுவதற்கு தண்டோரா போட்டு ஊர் முழுவதும் சொல்லப்பட்டது. ஆனால் ஏலம் கூறும் அன்று அந்த மரத்தை ஏலம் எடுப்பதற்கு ஒருவர் கூட வரவில்லை. இதனை அறிந்த கனம் எலியேசர் ஐயரவர்கள் சென்று அந்த மரத்தை வெட்டி போடுவதற்கு ஆட்களின்றி மரத்தை ஏலம் எடுத்தார்கள். ஏலம் எடுத்த ஐயரவர்களுக்கு அதனை வெட்டி வீடு சேர்ப்பது மிகுந்த கடினமாயிற்று. உடன்குடி மக்கள் யாரும் அம்மரத்தினை வெட்டுவதற்கு முன்வரவில்லை. எனவே ஐயரவர்கள் வெளியூரிலிருந்து மரம் வெட்டுபவர்களை அழைத்துக் கொண்டு வந்து மரத்தினை வெட்டி வீடு கொண்டு வந்தார்கள். ஐயரவர்களுக்கு எந்த தீங்கும் வரவில்லை என்பதை அறிந்த பின்னரே ஊர் மக்கள் பயம் நீங்கி நம்பிக்கை பெருமூச்சு விட்டனர்.

**நாசரேத்தின் பேய் பயம்**

கனம் மார்காஷியஸ் ஐயவரவர்கள் நாசரேத்தில் பணி செய்துகொண்டிருந்த பொழுது மக்கள் அதிகமாக பேய்களுக்கு பயப்படுவார்கள். காரணம், அவர்கள் இந்து மதத்திலிருந்து வந்தபடியினால் அந்த மதத்தில் தாங்கள் கொண்டிருந்த நம்பிக்கை அவர்களை பெரிதும் வாதித்தது. அந்நாட்களில் மரித்துப்போனவர்கள் ஆவிகளாக சுற்றுவார்கள் என்கிற எண்ணம் மக்கள் மனதில் வெகு ஆழமாய் பதிந்திருந்தது. அதிலும் கொலை செய்யப்பட்டு மரித்து போனவர்கள் அல்லது இளம் வயதில் மரித்தவர்கள் மற்றவர்களை பழி வாங்குவார்கள் என்கிற எண்ணம் மிக அதிகமாகவே இருந்தது. இந்த பயத்தை நீக்குவதற்கு எத்தனையோ பிரசங்கங்களை செய்தும் மக்கள் மனதிலிருந்து ஆவிகளின் மீது கொண்ட மூடத்தனத்தையும், பயத்தையும் கனம் மார்காஷியஸ் ஐயரவர்களால் நீக்க முடியவில்லை. ஜெபத்தோடு கூட யோசித்து ஒரு முடிவிற்கு வந்தார்கள். ஆவிகளின் பயத்தை நீக்க வேண்டுமென்றால் கல்லறையின் பயத்தை நீக்க வேண்டுமென்று எண்ணி, சகல பரிசுத்தவான்களின் திருநாள் மற்றும் சகல ஆத்துமாக்களின் திருநாள் ஆகிய இரண்டு திருநாட்களையும் வெகு விமரிசையாக கொண்டாட முடிவு செய்தார்கள். அதின் விளைவாக நவம்பர் மாதம் இரண்டாம் தேதி சகல ஆத்துமாக்களின் திருநாளன்று நாசரேத் தூய யோவான் ஆலயத்தின் முன்னிருந்து பாடல்களைப் பாடிக்கொண்டு பவனியாக கல்லறைத் தோட்டம் வரை அழைத்துச் சென்று அங்கு ஆராதனை நடத்தினார்கள். அவ்வாராதனையில் மரணம், உயிர்த்தெழுதல், பரிசுத்தவான்களின் ஐக்கியம், கிறிஸ்தவ




மரணமும் அடக்கமும், கிறிஸ்துவின் இரண்டாம் வருகை, மரித்தவர்களின் நிலை, மோட்சம், நரகம் போன்றவைகளை மக்களுக்குப் போதித்தார். அதன் பின்னரே மரித்துப் போனவர்களின் ஆவிகளுக்குப் பயப்படும் பயம் அவர்களை விட்டு நீங்கியது. நாசரேத்தில் ஆரம்பமான இந்த பழக்கம் நாளடைவில் தமிழகத்தில் பல பகுதிகளுக்குப் பரவினது என்று கனம் கிறிஸ்துதாஸ் ஐயரவர்கள் **'மகோன்னத மிஷெனெரி மார்காஷிஸ்'** என்ற புத்தகத்தில் குறிப்பிட்டிருக்கிறார்கள். நாசரேத்தில் பேய்களுக்கு பயப்பட்டுக் கொண்டிருந்த மூடத்தனத்தை மார்காஷியஸ் ஐயவர்கள் முடிவிற்கு கொண்டுவந்தார்கள்.

**தேரிக்காடும் கிறிஸ்துவின் வருகையும்**

1881ம் வருடம் நாசரேத், கிறிஸ்தியாநகரம் மற்றும் அதின் சுற்றுவட்டாரத்தில் ஒரு கூட்ட மக்கள் தேரிக்காட்டிற்குள்ளும், சுனைக்கு அருகாமையிலும் கிறிஸ்துவின் இரண்டாம் வருகைக்காக காத்திருந்தார்கள். இந்த காத்திருப்பிற்கு பின்னால் ஒரு பெரிய வரலாறு ஒன்று உண்டு. அக்காலத்தில் அன்னை ஷிப்ற்றன் என்ற புகழ்பெற்ற அமெரிக்க ஜோசியக்காரி ஒருவர் 1875ம் ஆண்டு ஒரு செய்தியை வெளியிட்டார். அது என்னவெனில் இன்னும் ஆறு ஆண்டுகள் கழித்து கர்த்தர் வருவார் என்பதே அந்த செய்தி. அவள் சொன்ன வார்த்தை இந்தியாவிலும் பரவ ஆரம்பித்தது. இந்தியாவில் திருவாங்கூர் என்ற பகுதியில் மிக பிரபலமடைந்தது. திருவாங்கூர் என்பது கேரளாவின் சில பகுதிகளும், கன்னியாகுமரி மற்றும் தென்காசி பகுதிகளை உள்ளடக்கிய பகுதியாகும். இப்பகுதியில் C.M.S. ல் குருவானவராயிருந்த யுஸ்து யோசேப்பு என்பவர் அமெரிக்காவின் புதுவித போதனையை திருச்சபை மக்களுக்கு போதிக்கலானார். அது என்னவெனில் 1881ம் வருடம் பரத்துக்கேறின திருநாளன்று இயேசு கிறிஸ்துவின் இரண்டாம் வருகை வரும் என்று தீர்க்கமாய் பிரசங்கித்தார். இப்போதனையானது திருவாங்கூர் பகுதியில் மட்டுமல்லாது திருநெல்வேலி மிஷனிலும் பரவ ஆரம்பித்தது. திருநெல்வேலியில் மத்தேயு மற்றும் அருளானந்தம் ஆகிய இருவரும் இவரோடு கூட இணைந்துக் கொண்டார்கள். இவ்விருவருக்கும் யுஸ்துவின் ஐக்கியத்தில் தீர்க்கத்தரிசி என்ற பட்டமும் வழங்கப்பட்டது. இவர்கள் பல இடங்களுக்கு சென்று பிரசங்கித்ததின் நிமித்தமாக நாசரேத், மெஞ்ஞானபுரம், இடையன்குடி, தூத்துக்குடி, கிறிஸ்தியாநகரம் போன்ற பகுதிகளிலிருந்த மக்கள் ஜெபத்திலும், உபவாசத்திலும் கிறிஸ்துவின் வருகைக்காக எதிர்நோக்கி காத்திருந்தார்கள். ஆனால் அவர் போதித்தபடி இயேசு கிறிஸ்து அன்று வரவில்லை. ஆனாலும் அவர் மறுபடியுமாக தேதியினை மாற்றி அறிவித்து செப்டம்பர் மாதம் 19ம் தேதி அல்லது 29ம் தேதியன்று வருவார் என்று மறுபடியும் அறிவித்தார். யுஸ்துவின் வார்த்தையினை நம்பிய மக்கள் கூட்டம் கூட்டமாக சென்று கடற்கரையிலும், தேரியிலும் கிழக்கு நோக்கி அமர்ந்து ஜெபித்துக் கொண்டிருந்தார்கள்,

நாசரேத்தில் மார்காஷியஸ் ஐயரவர்களின் ஊழியக்காலம் அது. ஐயரவர்களும் உபதேசியார்கள் பலர் அறிவுரைகளைக் கூறியும் சுமார் 150க்கும் மேற்பட்ட மக்கள் உவரி கடற்கரைக்குச் சென்று அங்கு காத்திருந்தார்கள். செப்டம்பர் மாதம் கடந்து போயிற்று ஆனால் இயேசுவின் வருகையில்லை. காத்திருந்த மக்களை மார்காஷியஸ் ஐயரவர்கள் சென்று சந்தித்து அவர்களுக்கு

போதனைகளைக் கொடுத்து அழைத்துவந்தார்கள். அதன் பிறகு நாசரேத் தேவாலயத்தில் முறையாக இறையியல் கல்வி கற்றவர்கள் மட்டுமே போதிக்க வேண்டும் என்று நியமித்தார்கள். இந்நாள் வரையில் நாசரேத் தேவாலயத்தில் ஆலய ஆராதனைகளில் குருவானவர்கள் தவிர வேறெவருக்கும் பிரசங்கம் செய்யும் வாய்ப்பு கொடுக்கப்படுவதில்லை.

கிறிஸ்தியாநகரத்திலும் பலர் இப்போதனையினால் ஈர்க்கப்பட்டு சுமார் 100 பேர் வேதமுத்து என்ற போதகம் என்பவரின் தலைமையின் கீழ் பணிகாரங்களைச் சுட்டுக்கொண்டு உடன்குடிக்கு அருகே இருக்கின்ற இளஞ்சுனை என்ற பகுதிக்குச் சென்று இரவும் பகலும் கிழக்கு நோக்கி காத்திருந்தார்கள். இயேசு வராததினால் வெட்கத்தோடு கூட தங்கள் ஊருக்குத் திரும்பி வந்தார்கள். அதன் பிறகு ஆலயத்தில் கற்றுகொடுக்கப்படும் சத்தியத்திற்கு அன்றி வேறென்றிற்கும் மக்கள் தங்களை செவியினை சாய்க்ககூடாது என்ற தீர்மாணத்தோடு இந்நாளவும் வாழ்ந்து வருகிறார்கள்.

**முடிவுரை**

பெரும்பாலும் மக்கள் தங்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள பணியினை செவனே செய்து முடித்தால் போதும், மற்ற காரியங்களில் நாம் பிரவேசிக்கக் கூடாது என்று வாழ்ந்து வருகின்றார்கள். ஆனால் அக்காலங்களில் ஆண்டவரின் ஊழியத்தினை நிறைவேற்றிய மிஷனெரிகள் மக்களின் அடிப்படை வாழ்விலே மாற்றங்களை கொண்டுவந்தார்கள். மதத்தின் மீது கொண்டிருந்த மூட நம்பிக்கைகளை அகற்றி அவர்களை மெய்யறிவு பெற செய்தார்கள். அக்காலங்களில் அவர்கள் தியாகத்தோடு ஆற்றிய தொண்டின் பயனாகவே இன்று **அகவிருள் நீங்கி புற ஒளி வீசிக்** கொண்டிருக்கின்றோம் என்றால் மிகையாகாது.

**அருள்திரு .H ஜாண் சாமுவேல்,**
**பண்டாரஞ்செட்டிவிளை.**

---

# மரத்தடியும் இலங்கநாதபுரமும் ..

இலங்கநாதபுரத்தில் ஒரு பேயாடிப் பெண் இருந்தாள். வயது முதிர்ந்த அவளுக்கு ஒரு மகள். திருமணமானவள். பேயாடாவிட்டாலும், குணவிஷேடங்களிலும், தன் மத வைராக்கியத்திலும், தாயை நிகர்த்தவள். ஒரு தடவை அவ்வூராரிற் சிலர் கிறிஸ்து சமயத்திற் சேர்ந்து, தாமஸ் ஐயரின் அனுமதியுடன் சாந்தபுரத்தில் குடியேறினர். அவளும் அவளது கணவனும், ஆவிக்குரிய சிந்தனை கிஞ்சித்தும் இல்லாமல், மற்றவர்களோடு சேர்ந்து, ஐயரிடம் பாசாங்குகள் செய்து, சாந்தபுரத்தில் வீடு கட்டி வாழ்ந்தார்கள்.

அந்நாட்களில் கிராமப் பெண்கள் மர நிழலிலமர்ந்து நூல் நூற்பது வழக்கம். சுமார் 10, 15 பெண்கள் ராட்டைகளுடன் உட்கார்ந்து அவ்வேலையிலீடுபடுவர். அவ்வேளையில் உபதேசியார் அங்கு வந்து அவர்களுக்குச் சுவிசேஷம் கூறுவதுண்டு. கிறிஸ்தவப் பெண்களாயிருந்தால், அவர்களுக்கு காத்தருடைய ஜெபம், பத்துக் கற்பனைகள், விசுவாசப்பிரமாணம், ஞானோபதேச வினா விடை, கீர்த்தனங்கள் முதலியவற்றை மனப்பாடமாகக் கற்பிப்பது அவர் வழக்கம். அப்படிக் கற்றதின் மூலம் இவள் மனத்தெளிவும் உயிருள்ள விசுவாசமுமுடையவளானாள். அது முதல் தன்னைப் போன்ற வேறு மூன்று நான்கு பெண்களுடன் தவறாது மெஞ்ஞானபுரம் சென்று, ஆராதித்து, ஊக்கமாகப் பிரசங்கங்களைக் கேட்டு, பிரசங்கக் குறிப்புகளை மனப்பாடம் செய்துவந்தாள்.

ஒரு நாள் மரத்தடி வகுப்பில், பரிசுத்த ஆவியானவரைப் பற்றி உபதேசியார் போதித்தார். ஜெபத்தில் தரித்து காத்திருந்தவர்களுக்குப் பெந்தேகோஸ்தே திருநாளில் பரிசுத்த ஆவியானவர் அருளப்பட்டார் என்ற சத்தியம் தன் மனதில் ஆழமாகப் பதியப் பெற்ற அவள், தானும் தன் சிநேகிதிகளுடன் புதன் கிழமை தோறும் தன் வீட்டிலேயே கூடி பரிசுத்த ஆவியானவருக்காகக் காத்திருந்து ஜெபிக்கத் தீர்மானித்து, அவ்வாறே செய்து வந்தாள். துவக்கத்தில் 15, 16 பேர் கூடினர். இறுதியில் உண்மையான ஆர்வமற்றவர்கள் இரண்டொருவராக விலகிக் கொள்ள, ஆறுபேர் நிலைத்து நின்று, தரித்திருந்தனர்.8 கிருபையுள்ள ஆவியானவரும் அருளப்பட்டார். ஆனால், தற்கால பெந்தேகோஸ்தே கூட்டத்தாரின் தாறுமாறுகளுடன் அல்ல. அவர் அவர்களை முற்றிலும் ஆட்கொண்டவராக, சகல சத்தியத்தில் நடத்துபவராக, ஆத்தும ஆதாயத்தில் ஈடுபடுத்துகிறவராக, மனமகிழ்ச்சியும் முகமலர்ச்சியுமுடைய கிறிஸ்தவர்களாக அவர்களை காத்துக்கொள்பவராகி, பாவத்தையும் பிசாசையும் ஜெயித்து வெற்றி வாழ்க்கை வாழப் பழக்கி அவர்களைப் பராமரித்து ஆதரிப்பவராய், அவர்களில் தம்முடைய இரட்சிப்பின் கிரியையை நிறைவேற்றினார்.



# மாவீடு பண்ணைப் பாக்கியவதி பாக்கியம்

யார் வீட்டில் என்ன கஷ்டமோ, எவர் வீட்டில் என்ன துயரமோ, எந்த வீட்டில் என்ன வியாதியோ, எங்கே கண்ணீரோ, – அங்கே, அந்த வீட்டில் துயரப்படுகிறவர்களுடனே துயரப்படுகிற ஒரு மூதாட்டி மாவீடுபண்ணைச் சபையிலிருந்தாள். பாக்கியம் என்பது அவளுடைய பெயர், கைம்பெண், கணவர் கண்மூடின நாளிலிருந்து கஷ்ட ஜீவனமே. அன்னாள் என்ற பெயருடைய ஒரே மகள் உண்டு. அவளை 'ஆளாக்கி ஆம்படையான்' கையில் கொடுத்துக், கடமையை நிறைவேற்றினாள் தாய்.

வயதில் மூதாட்டி, ஆனால் தன் இரட்சகரான கிறிஸ்துவுக்காகக் கொண்ட வைராக்கியத்தில் சீமாட்டி. காலை முதல் மாலை வரை ஆண்டவரின் சேவை: இரவில் பெரும் பகுதி அவருடன் ஜெபத்தில் உரையாடல். இப்படியே நாட்கள் கடந்தன.

பரிசுத்தவாட்டியாகிய பாக்கியம் அவர்களின் வாழ்க்கையில் அவளால் ஆதாயப் படுத்தப்பட்டவர்கள் அநேகர்; இரு சம்பவங்களை மட்டும் இங்கு பார்ப்போம்.

குருசாமி என்பவர் மேட்டுக்குடியிற்பிறந்தவர். அவரது மனைவி முத்தம்மாளும் உயர் குடியொன்றைச் சேர்ந்தவளே. மனமொத்த தம்பதிகளான அவர்களுக்கு ஒரு மகன் பிறந்தான். சகல சம்பத்துக்களுமுடைய அக்குடும்பத்தில் சந்தான பாக்கியமும் கிடைத்து அவர்கள் சந்தோஷம் சம்பூரணமாயிற்று.

குருசாமிக்கு ஒரேயொரு மனக்கவலை, தன் அன்புத் தம்பி கிறிஸ்து மார்க்கத்தில் சேர்ந்து கிறிஸ்துவின் வழியில் நடக்க ஆரபித்ததே அதற்குக் காரணம். தம்பிக்கும் ஒரே ஒரு கவலை தான்! அண்ணனும் அண்ணியும் அண்ணலை அண்டிக்கொள்ளவில்லையே என்ற கவலையது. இரு மதத்தினராயினும் சகோதரரிருவரும் மற்றெல்லா விஷயங்களிலும் ஒன்றுபட்டிருந்தனர். தம்பி தனக்குத் தருணம் கிடைத்தபோதெல்லாம் தமையனிடம் தன் தேவனைப் பற்றிச் சொல்லத் தவறமாட்டார். தொடக்கத்தில் அதை விரும்பாத அண்ணன் நாளடைவில் அன்பரை அண்டிக் கொள்ள ஆரம்பித்தார்.

அதையறிந்த முத்தம்மாள் தன் கணவனைக் கடிந்து கொண்டாள். **'வேதத்தில் சேர்ந்தால்'** தன் சுற்றத்தாரின் வெறுப்புக்கும் வெகுளிக்கு முள்ளாக வெண்டுமே என்று பயந்தாள். 'அம்மன் அடிப்பாளே' என்று அங்கலாய்த்தாள். 'இனத்தவர் இகழுவரே' என்று இன்னலுற்றாள். 'இம்சிப்பரே' என்றும், 'இடுக்கண் பல தருவரே' என்றும், தன் 'கணவனைக் கஷ்டப்படுத்துவரே' என்றும் கண்ணீர் வடித்தாள். குருசாமியை அவருடைய பதட்டங்ளொன்றும் பாதிக்கவில்லை முத்தம்மாள் என்ன சொல்லியும் கேளாமல், நீறு பூசுவதை நிறுத்திக் கொண்டார். 'சாமி கும்பிடு' வதற்கு முற்றுப்புள்ளி வைத்தார். அது கண்ட முத்தம்மாள் முன்னிலும் முரட்டுத்தனமாகச் முரண்டு பிடிக்க முனைந்தாள். சமாதானமாக வாழ்ந்து வந்த அக்கணவனும் மனைவியும் அடிக்கடி மனச் சமாதானத்தை இழந்தனர். ஒருவோரோடுருவர் கோபித்துக் கொண்டு அன்ன ஆகாரமின்றி, பேச்சுவார்த்தையின்றி, ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுக்க மனமின்றி நாட்களைக் கடத்தினர்.

ஒரு நாள் அவர்களுடைய குழந்தைவியாதிப்பட்டது. துடித்துப் போயினர் இருவரும்! பிள்ளை பிழைக்கவேண்டுமேயென்ற ஆத்திரத்தில், யார் என்ன மருந்து சொன்னாலும் அதைக் கொடுத்தனர்? மருந்துடன் மந்திரத்தையும் மாந்திரீகத்தையும் நம்பினர். பலன் நோய் முற்றிக் கொண்டே போயிற்று! இனிக் கடவுள் தான் காப்பாற்றவேண்டும்.



முத்தம்மாள் முப்புடாரிக்குப் பூசைபண்ணவும், காளிக்குக் காணிக்கை கொடுக்கவும், காத்தாயிக்குக் கோழிவெட்டவும், நேர்ந்துகொண்டாள். குருசாமி, **“அதெல்லாம் கூடாது. நான் தெரிந்து கொண்டிருக்கிற கடவுள் தான் உண்மையான தெய்வம்”**, என்றார் அவள், “இல்லை இல்லை, அம்மன் தான் உண்மைக் கடவுள்”, என்றாள் பெரிய வாக்குவாதமுண்டாகி விட்டது. தினம் தினம் அது தான் போராட்டம். இதற்கிடையில் பையனின் நிலைமை மோசமாயிற்று. முத்தம்மாள், “போங்கள் அம்மனுக்குப் பலி கொடுக்க ஏற்பாடு செய்யுங்கள்”, என்று நச்சரிக்கலானாள். அவளுடைய நச்சரிப்புத் தாங்காமல், “சரி, ஆனால் ஒரு நிபந்தனை, அம்மனுக்குப் பலி கொடுத்த பிறகும் பிள்ளைக்குச் சுகம் கிடைக்காவிட்டால், நீ என்னுடன் சேர்ந்து கிறிஸ்தவளாகிவிடவேண்டும். சம்மதமா?”, என்று கேட்டதும், அவள் உற்சாகத்துடன் ஒரு துள்ளுத் துள்ளிச், “சம்மதம்” என்றாள்.

இருவரும் அம்மன் கோயிலுக்குப் போனார்கள் பூசாரியிடம் தங்கள் குறையைச் சொன்னார்கள் பூசாரி, அம்மனுக்குப் பலி செலுத்திவிட்டு, “அம்மன் சொல்கிறாள், குழந்தைக்கு ஆகாரமொன்றும் கொடுக்கவேண்டாமென்று! குழந்தைக்குச் சீக்கிரம் சுகமாகிவிடும், போய்வாருங்கள்” என்று விடை கொடுத்தனுப்பினான். பூசாரி சொன்னபடி, முத்தம்மாள்பிள்ளையைப் பட்டினி போட்டாள். பட்டினியினாலும், வியாதியின் அகோரத்தினாலும் பிள்ளை மெலிந்து துரும்பாகி விட்டான்.

இரண்டு மூன்று நாட்களுக்குப் பின் பாக்கியம் அம்மாள் சுகவீனமாயிருந்த குழந்தையைப் பார்க்க வந்தாள் முத்தம்மாள் அவளை வரவேற்றாள். மெலிந்து நலிந்து கிடந்த அப் பிள்ளையைப் பார்த்ததும், பாக்கியம், “முத்தம்மா. பிள்ளைக்கு என்ன ஆகாரம் கொடுத்தாய்?” என்று சாதாரணமாக யாரும் கேட்கும் கேள்வியைக் கேட்டாள். முத்தம்மாள். பூசாரியிடம் அம்மன் சொல்லிவிட்டபடியால் தான் குழந்தைக்கு ஒன்றும் கொடுக்கவில்லையென்றாள். அம் மூதாட்டிக்கு அழுவதா சிரிப்பதா என்று தெரியவில்லை! மூக்கில் விரலை வைத்தாள்; சிரிப்புத் தான் வந்தது! சிரித்து விட்டு, “அம்மனுக்கு ஒன்றும் தெரியாது, ஒன்றும் செய்யவும் செய்யாது”, என்று கூறி ‘முத்தம்மா, நான் ஒரு சொப்பனம் கண்டேன் என்ன தெரியுமா? நீயும் புருஷனும் எங்கள் கோயிலுக்குக் காணிக்கை கொடுத்தீர்கள் என்று!” என்றாள் முத்தம்மாளுக்குக் கோபம் வந்து விட்டது. அவள், “என்னது? உங்கள் கோயிலுக்கா? எங்கள் அம்மன் சத்தியமாகச் சொல்லுகிறேன்: அது ஒருக்காலும் நடக்காது”, என்று சீறினாள் பாக்கியமோ அமைதியாக, **“பார்க்கத்தானே போகிறேன், நீயும் அவரும் எங்கள் கோவிலுக்குப் போகிறதை!”**, என்று உறுதியுடன் சொல்லிவிட்டு நகர்ந்தாள் அவளை எரித்து விடுவதைப் போல் பார்த்துக்கொண்டு நின்றாள் முத்தம்மாள்.

பட்டினி கிடந்த வியாதிக்காரக் குழந்தை இரண்டு நாட்களுக்குப் பின் மரித்துப் போயிற்று. கதறியழுதாள் தாய்; உருண்டாள், புரண்டாள், முட்டினாள், விழுந்தாள், எழுந்தாள். - வளர்ப்பானேன்? காரியங்கள் மளமளவென்று நடந்தேறின. குழந்தையை அடக்கம் செய்தாயிற்று. துக்க நாட்களும் முடிந்தன.

ஆற அமர யோசித்தாள் முத்தம்மாள்: ‘பாக்கியம் சொன்னது சரிதானோ? தன் கணவன் கூறினதுதான் உண்மையாயிருக்குமே? அவர்கள் சொன்னதைக் கேட்டிருந்தால் பையன் பிழைத்திருப்பானோ? அம்மனுக்கும் பூசாரிக்கும் சக்தியில்லையே! அவள் மீது வைத்த நம்பிக்கையெல்லாம் வியர்த்தமாயிற்றே!’ யோசித்தாள், ஆழ்ந்து யோசித்தாள்.

ஒரு நாள் அவள் பாக்கியத்தின் வீட்டுக்குப் போனாள். தன்னை அன்புடன் தழுவிக்கொண்ட அப்பெரியவளின் தோளில் சாய்ந்து, ஏங்கி ஏங்கியழுதாள். அவள் அழுது தீருமட்டும் அவளை அணைத்துக்கொண்ட அம் மூதாட்டி, அவளுக்கு ஆறுதல் சொல்லி, **துயரப்படுகிறவர்களின் கண்ணீரைத் துடைக்க வல்ல இயேசுநாதரின் அன்பை**யெடுத்துக் கூறி, அவள் தன் துன்பத்தையெல்லாம் அவர் பாதத்தில் வைத்து ஆறுதலடையச் செய்தாள். பாக்கியம் பேசப் பேச, அவளுடைய வார்த்தைகளை ஆவலுடன் கேட்ட முத்தம்மாள், **“எனக்காக ஜெபியுங்கள். அக்கா”**, என்று வேண்டினாள். பாக்கியம் உள்ளமுருகக் கண்ணீரைக் கொட்டித் தன்னுடன் முழங்காலில் நின்ற முத்தம்மாளுக்காக மன்றாடி ஜெபித்தாள் ஜெபித்துக் கொண்டிருக்கும் பொழுது, தன்னுள்ளத்தில் விவரிக்கக்கூடாத சமாதானம் நிறைவதை உணர்ந்த முத்தம்மாள், அந்த நிமிஷமே தன்னைக் கர்த்தருக்கு ஒப்புக்கொடுத்து, மலர்ந்த முகத்துடன் வீடு திரும்பினாள்.

வாசலில் அவளை வரவேற்ற குருசாமி, அழுகையும் கண்ணீருமாயிருந்த தன் அன்பு மனைவி முகமலர்ச்சியுடன் வருவதைப் பார்த்து வியந்தவர், நடந்ததையறிந்து ஆனந்த பரவசமடைந்தார். மறுதினம் இருவரும் கடையனோடைக்குச் சென்று ஆபிரகாம் ஐயரிடம் தங்கள் வரலாறு கூறி, அவரால் கிறிஸ்து சபையில் ஏற்றுக்கொள்ளப்பட்டார்கள்.

இரண்டொரு மாதங்களில் குருசாமி **‘குருபாதமா’**கவும், முத்தம்மாள் **‘அன்னமுத்தா’**கவும், மாறி ஞானஸ்நானம் பெற்று மாவீடுபண்ணைச் சபையின் முத்தாரமாக விளங்கினர் (1889). பாக்கியத்தின் மகள், அன்னாளின் வீடு காலக்கிரமத்தில் பிறந்த அவளுடைய இரு ஆண் குழந்தைகளால் குதூகலம் நிரம்பியதாகக் காணப்பட்டது. பல ஆண்டுகள் சந்தோஷமாகக் கழிந்தன.

பின், புயல் வீசிற்று! ஏதோ, திடீரென்று வந்த நோய்க்கு இரையாகி, அன்னாளின் அன்புக் கணவன் அவளைத் தவிக்க விட்டுப் போய்விட்டார் அந்தத் துயரத்தை அன்னாளால் தாங்கிக்கொள்ள முடியவேயில்லை. மாதங்கள் உருண்டோடின. ஆனால் அன்னாளின் துயரமோ அவளுடனேயே தங்கிவிட்டது. நாளானது அதை ஆறப்பண்ணும் என்பர். ஆனால் நாளானது துக்கத்தை அதிகரிக்கத்தான் செய்ததேயன்றி, ஆறப்பண்ணவில்லை. தாயாரின் ஆறுதல் மொழிகளோ, இன ஜனத்தவரின் இன் சொற்களே, தெய்வ ஊழியரின் தேறுதல்களோ, இவையெவையுமே அவளது உள்ளக் குமுறலை ஆற்றக்கூடியவையாயிருக்கவில்லை. துயர மிகுதியினால் அவள் ஆண்டவரின் அன்பைச் சந்தேகித்தாள். கர்த்தரின் கருணை கரைந்துவிட்டதோ என்றெண்ணினாள் அவர் தன் வல்லமையை இழந்துவிட்டாரோ என்று நினைத்தாள். ஒரு நாள் அவள் தீவிரமாய்ச் சிந்திக்கலானாள்:

..... ஒருக்கால் அப்படியுமிருக்குமோ.... ? என் தகப்பனாரும் தாயாரும் ஒரு காலத்தில் சேவித்துப், பின் புறக்கணித்துத் தள்ளிவிட்ட ‘சாமிகள், ‘அம்மன்’கள், ‘தெய்வங்கள்’ -இவைகள் இப்பொழுது வஞ்சம் தீர்த்துக்கொள்ள ஆரம்பித்து விட்டனவோ? .......” இவ்வாறு எண்ணி எண்ணிக் குழம்பினாள் சாமிகளின் கோபமே தன் கணவன் காலமாவதற்குக் காரணம் என்ற எண்ணமே மேலோங்கியது.

ஆண்டவராகிய கிறிஸ்து. நாதரைப்பற்றிய அன்பு தணிந்தது; விசுவாசம் குன்றியது நம்பிக்கை விலகியது!

சோதனையாக, மக்களிருவரும் நோய்வாய்ப்பட்டனர், மருந்துகள் அவர்களைக் குணப்படுத்தக் கூடாதனவாயின பாக்கியத்தின் ஜெபமும் கேட்கப்பட்டதாகத் தெரியவில்லை. நோயோ முற்றிக்கொண்டே போயிற்று அன்னாரின் கிறிஸ்தவ விசுவாசமும் வற்றிக்கொண்டே வரவே, அவளுள்ளத்தில் மூட நம்பிக்கைகள் தொற்றிக்கொண்டு வலுத்தன "இனி இயேசு வேண்டாம்: மறுதலித்துவிட்டு மாடசாமி கோயிலுக்குப் போய், சாமி முன் விழுந்துவிட வேண்டியது தான்" - தீர்மானித்துவிட்டாள் "அப்படிக் செய்யாவிட்டால். இரு கண்கள் போன்ற இரு மகன்களையும் இழக்கவேண்டியது தான்" - சிநேகிதி ஒருத்தியின் எச்சரிப்பு !

மகளுடைய முடிவைக் கேட்ட அன்னை அழுதாள் அன்பரின் பாதத்தில் விழுந்தாள். இரவு முழுவதும் ஜெபித்தாள்; **"ஆண்டவரே அற்புதத்தை நிகழ்த்தும்; ஆரோக்கியம் தாரும். அன்னாளைக் காரும்".** என்று கெஞ்சி மன்றாடினாள்; காலையில் மகளிடம் பேசி அவள் தன் முடிவை மாற்றிக்கொள்ள வேண்டினாள். பயனில்லை.

தன் மகள் தன்னுடைய தெய்வத்தை மறுதலித்துவிடப் போகிறாளேயென்று பாக்கியம் அங்கலாய்த்தாள் அதை எப்படி தடுப்பது என்று யோசித்தாள் கடையனோடைக் குருவானவர் தான் இதற்கு ஒரு யோசனை சொல்லக் கூடியவரென்று உறுதி கொண்டாள். உடனே கடையனோடைக்குப் போய், V. ஆபிரகாம் ஐயரிடம் சகலத்தையும் விவரித்துக் கூறினாள். கவனித்துக் கேட்ட ஐயர், "சரி, வாங்கம்மா, போகலாம், நானும் வருகிறேன்", என்று சொல்லி, அவளுடன் மாவீடுபண்ணைக்குச் செல்ல, கடையனோடை உபதேசியாரும், மாவீடுபண்ணை உபதேசியாரும் அவருடன் சேர்ந்துக்கொண்டனர்.

பையன்களின் அருகில் ஐயர் முழங்காற்படியிட்டு ஜெபித்தார். அன்னாளும், பாக்கியமும் உபதேசிமாரும் ஜெபத்தில் கலந்து கொண்டார்கள், ஜெபம் முடிந்ததும் ஆபிரகாம் ஐயர், 'பையன்கள் படுத்திருந்த அறையும் அந்த வீடும் வியாதியஸ்தருக்கேற்ற தன்று', என்று கண்டு, அவ்வூரிலிருந்த மிஷன் கட்டிடமொன்றில் அவர்களை வைத்து, நாசரேத் ஆஸ்பத்திரிலிருந்து மருந்து வாங்கிக் கொடுக்க ஏற்பாடுகள் செய்து, அன்னாளையும் நயமாகவும், பயம் நீங்கும்படியும் பேசி எச்சரித்துவிட்டுத் திரும்பினார் அவர் செய்த அவ்வேற்பாடு மிகுந்த பயனுள்ளதாயிருந்தது. கர்த்தருடைய கிருபையினால் சீக்கிரமே அப்பையன்கள் சுகம் பெற்றெழுந்தனர் அலை பூண்ட அன்னாளின் விசுவாசமும் திரும்ப நிலை கொண்டது.

இவ்வாறு, தன் குடும்பத்தையும் பிற கிறிஸ்தவ மக்களையும் தெய்வ பயத்திலும் பக்தியிலும் நிலைகொள்ளச் செய்து அநேகரை நீதிக்குட்படுத்தின பாக்கியம் என்ற பக்தசிரோன்மணி தன் முதிர் வயதில் பரலோக பாக்கியத்தை அனுபவிக்க சென்றாள்.

**அருள்திரு. டி ஏ கிறிஸ்துதாஸ் அவர்களின்**
**பரிசுத்தவாட்டிகள் பன்னிருவர்**

# ஆசியாவின் மருத்துவப் பயிற்சியின் முன்னோடி.

# எடித் மேரி பிரவுன்

T.John Selvin.



இவர் ஒரு பிரிட்டிஷ் மருத்துவர் மற்றும் மருத்துவ கல்வியாளர் ஆவார், இவர் இந்தியாவில் 1894 -இல் பஞ்சாபின் லூதியானாவில் முதல் கிறிஸ்தவ பெண்கள் மருத்துவக் கல்லூரியை நிறுவியவர்.

(குறிப்பு: லூதியானாவில் மருத்துவ மிஷனரி பணிகள் 1881 ஆம் ஆண்டில் ஸ்காட்டிஷ் சுவிசேஷக சகோதரிகள் மார்தா ரோஸ் கிரீன்ஃபீல்ட் மற்றும் கே கிரீன்ஃபீல்ட் ஆகியோரால் தொடங்கப்பட்டது. இதில் டேம் எடித் மேரி பிரவுன் 1893 இல் இவர்களுடன் சேர்ந்தார், அடுத்த ஆண்டு இவர் பெண்களுக்கான வட இந்திய மருத்துவப் பயிற்சி பள்ளியை நிறுவினார்.

இது ஆசியாவில் பெண்களுக்கான முதல் மருத்துவ பயிற்சி வசதி ஆகும். இவர் அரை நூற்றாண்டு காலம் இக்கல்லூரியின் முதல்வராக பணியாற்றியவர். இன்றைய நவீன மேற்கத்திய

மருத்துவ முறைகள் கொண்ட இந்திய பெண் மருத்துவர்கள் மற்றும் மருத்துவச்சிகள் (Midwives) ஆகியோரின் நினைவில், அறிவுறுத்தலில் பிரவுன் ஒரு முன்னோடியாக இருக்கிறார்!)

**வரலாறு:**

எடித் மேரி பிரவுன் 1864 இல் இங்கிலாந்து கம்பர்லேண்டின் வைட்ஹேவனில், ஐந்து சகோதரிகளில் நான்காவது பிறந்தார். இவர் தந்தை சிறு வயதில் இறந்துவிட்டார், அதனால் இவர் குடும்பம் லண்டனுக்கு குடிபெயர்ந்தது. இவரது மூத்த சகோதரி ஒரு மிஷனரி ஆவார், இது பிரவுன்க்கு மிஷனரி வழியில் சேவை செய்கிற மருத்துவப்பணிகள் இவருக்கு சிறுவயதில் இருந்து மிஷனரிபணி ஆர்வத்தை வளர்க்க வழிவகுத்தது. அதற்காக 1882 ஆம் ஆண்டில் கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் கவுரவ பட்டப்படிப்பில் அனுமதிக்கப்பட்ட முதல் பெண்களில் ஒருவரானார். பிறகு கேம்பிரிட்ஜ், கிர்டன் கல்லூரியில் பட்டம் பெற்றார். பட்டம் பெற்ற பிறகு, பெண்களுக்கான லண்டன் ஸ்கூல் ஆஃப் மெடிசின் மற்றும் எடின்பர்க் நகரில் மருத்துவம் பயின்றார். 1891 இல் மருத்துவ பயிற்சி கொடுக்கும் மருத்துவர் ஆனார் என்றும் சொல்லலாம். பிறகு பாப்டிஸ்ட் மிஷனரி சொசைட்டி மூலம் 1891 நவம்பர் 9 அன்று மிஷனரியாக இந்தியா வந்தார். அதற்கு முன்பே, 1881 ஆம் ஆண்டில், கிரீன்ஃபீல்ட் சகோதரிகள் லூதியானாவில் மூடப்பழக்கவழக்கங்கள் மற்றும் ஜாதி அடிமை வாழ் மக்களுக்கு இடையில் தங்களது மருத்துவ பணியைத் தொடங்கியிருந்தனர். இவர்கள் ஸ்காட்லாந்தைச் சேர்ந்த சுவிசேஷகர்கள் மற்றும் கல்வியாளர்கள் ஆவர். லூதியானாவின் தற்போதைய கிறிஸ்தவ மருத்துவக் கல்லூரியின் மருத்துவ பயிற்சி மற்றும் சுகாதார சேவைகள் திட்டங்களுக்கு முன்னோடியாக இவர்களின் மருத்துவப் பணி செயல்முறைகள் இருந்தது. இந்த கிரீன்ஃபீல்ட் சகோதரிகள் மற்றும் அவர்களது கூட்டாளிகள் சுகாதார கல்வி சேவைகளை ஏற்பாடு செய்தபோது, மேலும் சில நுணுக்கமான அவசிய திட்டங்களுடன், டாக்டர் எடித் மேரி பிரவுன் அவர்களுடன் 1893 இல் இணைந்தார்.

இந்தியாவில் உள்ள மருத்துவ நிலைமைகளை (அதாவது ஒரு உயிர் போகக்கூடிய சூழலிலும் கூட பெண் வியாதியஸ்தருக்கு ஆண் மருத்துவம் பார்க்கக்கூடாது மற்றும் கீழ் சாதி மூடப்பழக்கவழக்கம். மற்றும் நோயாளிகளுக்கு முதலுதவி உதவியாளர்கள் இல்லாத ரணமான மருத்துவ முறைகள்) கண்டு அதிர்ச்சியடைந்த டாக்டர் எடித் மேரி பிரவுன், முதலில், பெண்களுக்கு, குறிப்பாக மருத்துவச்சிக்கு (Midwives) கல்வி கற்பிக்க வேண்டிய அவசியத்தை உணர்ந்தார். அறியாமை, கல்வியறிவின்மை மற்றும் பர்தா அமைப்பு போன்ற நோய்களால் மவுனமாக அவதிப்பட்டு வந்த புறக்கணிக்கப்பட்டு மருத்துவ சிகிச்சையை இழந்துவந்த பெண்களின் நிலைகண்டு அவர் திகைத்துப்போனார், இதை மாற்ற வேண்டுமானால், இந்த மகத்தான பணியில் பயிற்சி பெற்ற நபர்களின் குழு தேவை என்று எடித் பிரௌன் முடிவு செய்தார்..

உடனே லூதியானாவில் தனது பெண்கள் மிஷனரிகளின் குழுவை கூட்டி 3 நாட்கள் தீவிரமாக செயல்பட்டு, வாடகைக்கு ஒரு பழைய வீட்டில், 30 படுக்கைகள் கொண்ட ஒரு மருத்துவப் பள்ளி தொடங்கப்பட்டது. (இதற்காக ஜனவரி 1894 இல், பிரிஸ்டலில் உள்ள ஒரு பெண் இந்த பழைய வீட்டை வாடகைக்கு எடுக்க பிரவுனுக்கு உதவ £ 50 (இப்போது, 5,085) நன்கொடை அளித்தார்). இப்படியே 1894 ஆம் ஆண்டில், டாக்டர் பிரவுன் மற்றும் அவரது சகாக்களால் பெண்களுக்கான வட இந்திய மருத்துவப் பள்ளி தொடங்கப்பட்டது. இந்தியக் குடிமக்களுக்கு, குறிப்பாக பெண்களுக்கு முதன்முதலாக ஆரம்பிக்கப்பட்ட மருத்துவக் கல்வி மற்றும் சுகாதார சேவைகளில் பயிற்சி பள்ளியாகும். மேலும், இதுபோல இந்தியா முழுதும் இப்படி செயல்படுத்தவேண்டும் மற்றும் பெண்களுக்கு (செவிலியர்) பயிற்சி அளிப்பதே இந்த பள்ளியின் முக்கிய நோக்கமாக செயல்பட்டது. அதற்க்காக மருத்துவ பயிற்சி மற்றும் சுகாதார சேவைகள் பயிற்சியின் ஒருங்கிணைப்பு வலியுறுத்தப்பட்டது. (டாக்டர் பிரவுன் பெண்களுக்கான ஒரு கிறிஸ்தவ மருத்துவ பயிற்சி மையத்தையும், கிறிஸ்தவ பெண்களுக்கான வட இந்தியா மருத்துவப் பள்ளியையும், வெறும் 4மாணவர்களையும், 4-ஆசிரியர்களையும் கொண்டு தொடங்கினார் என்பது குறிப்பிடதக்கது) நாளடைவில் இந்தியாவில் பெண்களுக்கான முதல் மருத்துவப் பள்ளி, மற்றும் மருத்துவ, நர்சிங் மற்றும் மருந்தியல் பள்ளிகளைக் கொண்ட முழு கல்லூரியாக



வளர்ந்தது,

இந்த நிறுவனம் 1947 வரை பெண்கள், மற்றும் குழந்தைகளுக்காக தொடர்ந்து நடத்தப்பட்டது. 1947 இல் பிரிட்டிஷ் இந்தியா பிரிக்கப்பட்டபோது, பஞ்சாப் இந்தியா மற்றும் பாகிஸ்தானாக பிரிக்கப்பட்டது, இதன் விளைவாக லூதியானாவில் ஆயிரக்கணக்கானோர்படுகொலைசெய்யப்பட்டனர். கல்லூரிமற்றும் மருத்துவமனையின் பல முஸ்லீம் ஊழியர்கள் பாகிஸ்தானுக்கு தப்பி ஓடிவிட்டனர், அதே நேரத்தில் சீக்கிய மற்றும் இந்து அகதிகள் இந்திய எல்லைக்கு வந்தனர். வன்முறை இருந்தபோதிலும், கல்லூரி மற்றும் மருத்துவமனையானது கலவர தாக்குதலில் இருந்து பாதுகாப்பாக இருந்தன. பலத்த காயமடைந்தவர்களுக்கு இம் மருத்துவமனை அந்த இடத்தில் ஒரு பெரிய அவசர சிகிச்சை மையமாக மாறியது.

(1894 முதல் 1952 வரையிலான காலகட்டம் ஆரம்பத்தில் இருந்தே கிறிஸ்தவ பெண்களுக்கான மருத்துவப் பள்ளியாக மகளிர் கிறிஸ்தவ மருத்துவக் கல்லூரி (CMC) என்பது வரை மாறி புகழ்பெற்ற வளர்ச்சியைக் கண்டது. 1952 ஆம் ஆண்டில், கிறிஸ்டியன் மெடிக்கல் கல்லூரி என பெயர் மாற்றப்பட்டபோது, 1953 முதல் மேம்படுத்தப்பட்ட எம்.பி.பி.எஸ் படிப்புக்கு பாகுபாடற்ற ஆண்களையும், பெண்களையும் சேர்க்கைக்கு அனுமதிக்க நடைமுறையை கொண்டு வந்தது)

**நடப்பு :**

பல ஆண்டுகளாக நிறுவனத்திற்குள் முக்கிய மற்றும் மூத்த பதவிகளை வகிக்கும் மிஷனரி பணியாளர்களிடமிருந்து ஒரு மாற்றம் ஏற்பட்டுள்ளது, இதனால் இப்போது மருத்துவமனை மற்றும் கல்லூரிகள் கிட்டத்தட்ட இந்திய பிரஜைகளால் மட்டுமே பணியாற்றப்படுகின்றன.

## இணை வரலாறு

மார்ச் 1957 இல் பிரவுன் மெமோரியல் மருத்துவமனையைத் திறந்து வைத்தது. இது இப்பள்ளியின் வரலாற்றில் ஒரு முக்கிய அடையாளமாகும். இன்று இதுவே சி.எம்.சி & மருத்துவமனை ஒரு முதன்மை நிறுவனமாகும், இது தனது சேவைகளை விரிவுபடுத்தியுள்ளது, மேலும் கிறிஸ்டியன் மருத்துவக் கல்லூரி, பல் கல்லூரி, நர்சிங் கல்லூரி, பிசியோதெரபி கல்லூரி மற்றும் அதனுடன் இணைந்த சுகாதார அறிவியல் நிறுவனம். இது ஒரு பெரிய பகுதிக்கு ஒரு பரிந்துரை மருத்துவமனையாக செயல்படுகிறது. சி.எம்.சி தொடர்ந்து சமூக நலன்களில் ஈடுபட்டுள்ள நிலையில், இது மிகவும் வளர்ந்த சிறப்பு சேவைகளில் விரைவாகவும் வரம்பாகவும் வளர்ந்துள்ளது.

(நவம்பர் 1951 க்குள், பிரவுன் இந்தியா வந்த 60 வது ஆண்டு நினைவு நாளில், இக்குறிப்பு பதிவாகியுள்ளது. அதாவது இக்கல்லூரி 411 மருத்துவர்கள், 143 செவிலியர்கள், 168 மருந்தக விநியோகிப்பாளர்கள் மற்றும் 1,000 க்கும் மேற்பட்ட மருத்துவச்சிகள் பட்டம் பெற்றது பற்றி) பிரவுன் 1952 இல் இக்கல்லூரி அதிபராக இருப்பதிலிருந்து ஓய்வு பெற்று காஷ்மீருக்கு குடிபெயர்ந்தார். பிரவுன் டிசம்பர் 6, 1956 அன்று ஸ்ரீநகரில் தனது 92 வயதில் இறந்தார். இப்போது சி.எம்.சிக்கு 125 ஆண்டுகால வரலாறு உள்ளது, இது பஞ்சாபில் மட்டுமல்ல, ஒட்டுமொத்த இந்தியாவிலும் மிகப் பழமையான கல்வி நிறுவனங்களாகவும் மருத்துவமனையாகவும் திகழ்கிறது. இன்று தற்போதைய சூழ்நிலையில், லூதியானா மாவட்டத்தை உலக வரைபடத்தில் சேர்த்துள்ள இந்த நிறுவனம், இந்த நகரத்தையும் பஞ்சாப் மாநிலத்தையும் முந்தையதை விட மிகச் சிறந்த முறையில் தணிக்கிறது. இறந்த போதிலும், மேரி பிரவுன் பெயரை இங்கு தொடர்ந்து பேசுகிறார்கள், இந்தியாவிலும் உலக மக்களிடமும் இதேபோன்ற பார்வையும் ஆர்வமும் கொண்ட இன்னும் பலரை கடவுள் எழுப்பவேண்டி பிரார்த்திப்போம்.

**காலவரிசை:**

கல்லூரிக் கல்வி எவ்வாறு வளர்ச்சியடைந்துள்ளது என்று பார்ப்போம்.

1. 1894 கிறிஸ்தவ பெண்களுக்கான வட இந்தியா ஸ்கூல் ஆஃப் மெடிசின் கல்லூரி முதன்முதலில் நான்கு ஆசிரியர்கள் உடன் நான்கு மாணவி சிறுமிகளுடன் சேர்க்கப்பட்டது.
2. 1895 முதல் மருத்துவமனை உதவியாளர்கள் பாடநெறி தொடங்கியது. லாகூர் பல்கலைக்கழகத்துடன் கல்வி இணைப்பு. டாக்டர் எடித் பிரவுன் முதல்வராக இருந்தார். 1909 அரசாங்கத்தின் வேண்டுகோளின் பேரில் கிறிஸ்தவமல்லாத மாணவர்களை அனுமதித்தல்.
3. 1953 கல்லூரி இணை கல்வியாக மாறியது மற்றும் பஞ்சாப் பல்கலைக்கழகத்தின் எம்பிபிஎஸ் தரத்திற்கு மேம்படுத்தப்பட்டது. 1961 கதிரியக்கவியல் மற்றும் கதிரியக்க சிகிச்சை பயிற்சி தொடங்கியது. 1973 பி.எஸ்சிக்கு பஞ்சாப் பல்கலைக்கழகத்தால் அங்கீகாரம் பெற்ற பள்ளிக்கு, நர்சிங் பள்ளியை மேம்படுத்துதல்.
4. 1992 பல் கல்லூரி திறக்கப்பட்டது.
5. 1999 அனைத்து கல்லூரிகளும் இப்போது ஃபரிட்கோட்டில் உள்ள பாபா ஃபரித் சுகாதார அறிவியல் பல்கலைக்கழகத்துடன் இணைக்கப்பட்டுள்ளன.
6. 2003 ஆம்புலன்ஸ் மற்றும் மோட்டார் பைக் துணை மருத்துவர்களுக்கான பயிற்சி தொடங்கியது.
7. 2006 பிசியோதெரபி கல்லூரி பிபிடி தகுதிக்கான பயிற்சியை வழங்கத் தொடங்கியது. 2007 இன்ஸ்டிடியூட் ஆப் அலையட் ஹெல்த் சயின்சஸ் துணை மருத்துவ தொழிற்கல்வி டிப்ளோமா படிப்புகளுக்கான குடையாக நிறுவப்பட்டது.

# சி.எஸ்.ஐ.
# டார்லிங் செல்வபாய் டேவிட் செவித்திறன் குறையுடையோர்

**உயர்நிலைப்பள்ளியின் 60 வது ஆண்டு கல்வி பணியின் வரலாறு (1961 – 2021) மானாமதுரை**

**அருள்திரு** G P **ராஜா**
**மணியகாரன்பட்டி சேகரம்**

**வரலாற்று பின்னணியம்:**

1960 ஆம் ஆண்டு **திருநெல்வேலி, பாளையங்கோட்டை செவித்திறன் குறையுடையோா் பாடசாலையின்** முதல்வராயிருந்த திரு.சிட்டன்டன் அவர்கள் மற்ற திருமண்டிலங்களுக்கு சவால் நிறைந்த அறைகூவாலை விட்டார், இப்பணியை செய்ய முன்வரும்படி அழைத்தார். உடனே மதுரை-இராமநாதபுரம் பேராயா் Rt. Rev.ஜாா்ஜ் தேவதாஸ் அவர்கள் பதில் கொடுத்தாா்.

மானாமதுரை டாா்லிங் செல்வபாய் டேவிட் செவித்திறன் குறையுடையோா் பள்ளியில் சாதாரணப் பள்ளிகளில் படிக்கும் மாணவர்களுடைய பாடத்திட்டங்களை பின்பற்றப்படுகிறது. இங்கு படிக்கும் மாணவர்களுக்கு பேச்சு, பேச்சு வாசிப்பு, ஒலி கேட்டல் பயிற்சியும் செயல்முறைப்பயிற்சியும் கொடுக்கப்படுகிறது. இப்பள்ளியில் பயிற்றுவிக்கும் முறைகள் முழுக் கருத்துப் பரிமாற்றம் முறை (Total Communication Method), தாய்வழிப் பிரதிபலிப்பு முறை (Mternal Reflective Method), தனி மற்றும் குழு செவித்துணைக் கருவிகள் பயன்படுத்தல் மூலம் கற்றுக்கொடுக்கப்படுகிறது. தமிழ், ஆங்கிலம், மாா்க்கப் போதனைகள், நீதிப் போதனைகள் மற்றும் மனித உரிமைக்கான கல்வியை பிள்ளைகளுக்கு கற்றுக் கொடுக்கப்படுகிறது.

கைவேலை, அச்சுக் கோா்த்தல் மற்றும் பைண்டிங் செய்தல் ஆகிய தொழில் பயிற்சிகள் கற்றுக் கொடுக்கப்படுகிறது. விளையாட்டு, ஓவியம், நடனம், நாடகம், கோலமிடுதல், இசைக் கருவிகள் மீட்டல் மற்றும் தோட்டக் கலை கற்றுக்கொடுக்கப்படுகிறது. அநேக முறை பத்தாம் வகுப்பில் 65%க்கு மேல் தோ்ச்சி அடைந்துள்ளாா்கள். அநேக முறை 100% தோ்ச்சியின் பெற்று பள்ளிக்கு பெருமை சோ்த்துள்ளாா்கள். பள்ளி தொடங்கிய நாட்களிலிருந்து பிள்ளைகளை விடுதியில் தங்கி படிக்க உதவிய CCCYC, CDM, SYNOD, DM@R, ஆசிரியர்கள், வசதி படைத்த குடும்பத்தினா்கள் கொடுக்கும் நன்கொடைகள் மூலமும் மற்றும் அரசு உதவியின் மூலமும் விடுதி நடத்தப்பட்டு வளா்ச்சி பாதையில் 60 ஆண்டுகளில் கல்விப் பணி தொடா்கிறது.

பிள்ளைகளுக்கு கொடுக்கும் தோட்டக்கலையின் மூலம் வரும் காய்கள் விடுதியில் சமையலுக்கு உதவும் வகையில் கற்றுக்கொடுக்கப்பட்டது. சொந்தமாகவே தொழிலை கற்றுக்கொள்ளும் வகையில் தொழிற்கல்வி கற்றுக் கொடுக்கப்படுகிறது. சுற்றுலா செல்லப் பிள்ளைகளை உற்சாகப்படுத்தப்படுகிறது. மற்றவர்களுக்கு நற்செய்தி சொல்ல உற்சாகப்படுத்தப்படுகிறது. பிள்ளைகளுடைய குறைபாடுகளை

- பள்ளியின் தொடக்கம் : 01.06.1961
- பள்ளியின் ஆரம்ப பெயா் : CSI. செவிடா் பாடசாலை
- பள்ளியைத் தொடங்கியவர் : Rt.Rev.ஜாா்ஜ் தேவதாஸ் (1959-1978) பள்ளியின் வருகை பதிவு: 3 ஆசிரியா்கள், 30 பிள்ளைகளுடன் ஆரம்பமானது.
- பள்ளியின் நிா்வாகிகள்: திருமதி.செல்லப்பா அவர்கள். (1961 - 1966) அருள்திரு.தவராஜ் டேவிட் ஏம்ஸ் (1967-1970) (பின்னாட்களில் இவா் மதுரை - இராமநாதபுரம் பேராயத்தின் நான்காவது பேராயராக அபிஷேகம் பண்ணப்பட்டாா். 1994 - 2004), திருமதி.செல்வபாய் தவராஜ் டேவிட் ஏம்ஸ் (1970) (2000 ஆம் ஆண்டில் இவருடைய பெயரில் இப்பள்ளி மாற்றம் பெற்றது)
- **பள்ளியின் வளா்ச்சி பாதை:** 1965 - 1966 - பள்ளி நடுநிலைப்பள்ளியாக உயா்த்தப்பட்டது. 1967-ஆசிரியா்களுக்கு அரசு மான்யம் கொடுக்கப்பட தொடங்கியது. 1967-மாணவா்களுக்கு விடுதி அரசு மான்யம் கிடைத்தது. 1968- ஜொ்மனி நாட்டு கிண்டா்னாதில்பேயின் தொண்டு நிறுவனத்தின் மூலம் கிணறு, பம்பும் பொறுத்தப்பட்டது. 1969 - பெண்களுக்கான தனி விடுதி கட்டப்பட்டு 1971 ஆம் ஆண்டு திரு.லூடத் லூவா்ஸ் அவர்களால் திறந்து வைக்கப்பட்டு, பேராயா் அவர்களால் மங்கலப்படைப்பு செய்யப்பட்டது. 1969 – புனா்வாழ்வு நிலையம் ஆரம்பிக்கப்பட்டது, இதை பேராயா் அம்மா டாக்டா்.திருமதி.ரஞ்சிதம் தேவதாஸ் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது,
- 1969 - 1970 ஆம் ஆண்டு ஆய்வுரையில் மாவட்ட கல்வி அதிகாரி கூறிய வாக்கியம். ("The Management is trying its best to give as much facilities to the Children to the Children as possible. The staff and the Management have been able to keep the children happy......Only people with a missionary zeal can run such institution. Wish the institution all success".)
- 1970 - அச்சுக் கூடம் ஆரம்பிக்கப்பட்டது. இதை பேராயா் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. 1970 –படக்காட்சி கருவியை திரு.சிட்டன்டன் அவா்களின் முயற்சினால் இங்கிலாந்திலிருக்கும் நண்பா்கள் மூலம் இலவசமாக வாங்கி கொடுக்கப்பட்டது. 1977 - 1978 - ஒன்பதாம் வகுப்பு ஆரம்பிக்கப்பட்டது. 1984 - 1985 - பத்தாம் வகுப்பு ஆரம்பிக்கப்பட்டது. 01.04.1989 - முன் பருவப்பள்ளி வகுப்பு ஆரம்பிக்கப்பட்டது.
- 30.08.2000 - CSI. செவிடா் பாடசாலையை - CSI. டாா்லிங் செல்வபாய் டேவிட் செவித்திறன் குறைவுடையோா் உயா்நிலைப்பள்ளி என்று பெயா் மாற்றம் பெற்றது. முன்பருவப்பள்ளி வகுப்பு முதல் பத்தாம் வகுப்பு வரை நடைபெறுகிறது.

யோசிக்கவிடாமல் தங்களுடைய தாலந்துகளை வெளிக்காட்ட பயிற்றுவிக்கப்படுகிறது. பெண் பிள்ளைகளுக்கு தையல் பயிற்சி கற்றுக் கொடுக்கப்படுகிறது. வேலை கிடைக்காமல் திரும்பி வரும் பிள்ளைகளுக்கு வேலை வாய்ப்பினை கொடுக்கும் அளவிற்கு பேராயர் அவர்கள் முயற்சி செய்து உதவி செய்து வருகின்ற பள்ளியாக அமைந்துள்ளது.

**இப்பள்ளியின் நோக்கம்**

சேவித்திறன் குறைவுடைய மாணவர்களுக்குள் பலவித சவால்களைப் புரிந்து கொள்ள உட்சாகப்படுத்தல்,

இறை அறிவோடு கூடிய பொது அறிவும் மற்றும் தொழில் கல்வியை கற்றுக்கொள்ள உட்சாகப்படுத்தல், தங்களையும், தன் குடும்பத்தையும் தாங்கக் கூடியவர்களாகவும், சமுதாயத்தினால் ஏற்றுக்கொள்ளப்படத்தக்கவர்களாகவும் உருவாக்க வேண்டும் என்பதே இப்பள்ளியின் நோக்கமாகும். முயற்சி, பயிற்சி, தேர்ச்சி இவை மூன்றும் இப்பள்ளியின் கோட்பாடாகக்காணப்படுகிறது.

இப்பள்ளி 60 ஆண்டுகள் கல்வி பணி செய்து வருகிறது. இன்னும் பல ஆண்டுகள் கல்வி பணியின் வளர்ச்சி பாதையில் செல்ல இயேசுவின் திருப்பெயரால் அன்பின் வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

## வரலாற்றுச் செய்தி



தென் நெல்லை அப்போஸ்தலர் கனம் ஜான் தாமஸ் ஐயர் அவர்களின் CMS ஐக்கிய திருச்சபையின் அடையாளமாக திகழும் மெஞ்ஞானபுரம் திருச்சபையின் மகமை கமிட்டி உறுப்பினர்களை சந்தித்த பொழுது நம்முடைய மாத இதழை வழங்கியும் ஐக்கிய சின்னத்தின் 175 ஆம் ஆண்டு ஆலய பிரதிஷ்டை விழாவை முன்னிட்டு மறுபதிப்பாக அருள்திரு D. A கிறிஸ்துதாஸ் அவர்களின் புத்தகம் வெளியிடப்படுவதை குறித்து ஆலோசித்த போது எடுத்த படம்


விரைவில் வெளிவருகிறது...
1941-2013
எமில் ஜெபசிங்
தென்னகத்தின் பவுல்
எமில் ஜெபசிங்
டாக்டர் எமில் ஜெபசிங் அண்ணனின் வாழ்க்கை வரலாறு!
தொடர்புக்கு
9444393227
மிஷன் இந்தியா இயக்கம்
MISSION INDIA MOVEMENT

கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தின் மாத இதழை தமிழ் வரலாற்று அறிஞர்களை சந்தித்து கொடுத்த பொழுது எடுத்த படங்கள்



நெல்லை அப்போஸ்தலர் கனம் ரேனியஸ் அவர்களின் 231 வது பிறந்த நாள்



மெஞ்ஞானபுரம் பேராசிரியர் குட்டி P ஜேஸ்கர் அவர்களுடன்



திரு ஜெப சுரேஷ் அண்ணன் அவர்களுடன்



அருள்திரு செல்வராஜ் ஐயா அவர்களுடன்



சுரண்டை ஆசை தம்பி அண்ணன் அவர்களுடன்



திரு ஆல்வின் ஜேக்கப் அண்ணன் அவர்களுடன்



திரு ஆல்வின் ஜேக்கப் அண்ணன் நம்முடைய சங்க உறுப்பினருடன்



திரு ஜான் ஞானராஜ் அவர்கள் நம்முடைய சங்க உறுப்பினருடன்



திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தின் சார்பாக வெளியிடப்படும் மாத ஆய்விதழ். தொடர்புக்கு +91 91767 80001